ஸ்ரீ

# முகவுரை.

(மநீஷிமாந்ய, ராவ்பஹதூர். ஸ்ரீஉவே.
R. நரஸிம்ஹய்யங்கார், மதுரை.)

நற்போதுபோக்கென்னுமிந்நூலை ஸ்ரீ ஸ்வாமிகள் எழுதி அடியேனுக்கனுப்பினர். ஸ்ரீ ஸ்வாமிகளின் க்ரந்தங்களெல்லாம் அச்சான பிறகு அடியேனுக்குக் கிடைப்பதும் அவற்றைக்கொண்டு அடியேன் ஆனந்தமாகப் போது போக்குவதும் இருபத்தைந்து வருஷகாலமாக நடந்துவருகிறது. இந்த க்ரந்தத்தை மாத்திரம் ஸ்வாமிகள் அச்சிடுவதற்குமுன் கையெழுத்துக் காபியாகவே அடியேனிடமனுப்பியருளினதை ஆலோசிக்கையில், இது அடியேனுடைய சொந்த அனுபவத்திற்குமாத்திரமிருக்கட்டுமென்று திருவுள்ளம்பற்றி யனுப்பியதாக இருக்குமோவென்றுதோன்றி இதைப்பலகால் படித்தேன். படித்ததில், இவ்வுலகம் முழுவதும் இப்புத்தகத்தைப்படித்து இன்புறவேண்டியது மிக அவசியமென்று தோன்றியதனால் அடியேன் இதை அச்சிடுவித்து ஸ்ரீ ஸ்வாமி ஸன்னிதானத்திற்கு அனுப்பிவைக்கிறேன்.

அடியேன் வைதிகஸமாஜங்களில் சொற்பொழிவாற்றத் தகுந்த கல்விபடைத்திலேனாகிலும் ஆசார்ய அனுக்ரஹத்தினால் பல பெரிய சபைகளிற் பேசியுமிருக்கிறேன். ஸ்ரீ ஸ்வாமியின் உபந்யாஸ அமுதப்பெருக்குகளை அடியேன் மதுரையில் பலகால் அநுபவித்தவன்

சென்னைத் தொண்டமண்டலம் ஸ்கூல் ஹாலிலுஞ் சென்று அநுபவிக்க ப்ராப்தமாயிற்று. உபந்யாஸ ச்ரவணங்கள் தவிர, ஸதாகாலமும் ஸ்ரீ ஸ்வாமியின் திவ்யமான க்ரந்தங்களைக்கொண்டேதான் அடியேன் போதுபோக்கிவருவது. "இவர் நம்மாழ்வாரோ! உடையவரோ! நம்பிள்ளையோ! மணவாளமாமுனிகளோ! அன்றி அவர்களெல்லாரும் ஒன்று சேர்ந்து அவதரித்த திருக்கோலமோ!" என்றே அடியேன் நினைத்திருப்பதும் பல ஸபைகளிற் பேசியிருப்பதும்.

இந்த ஸ்வாமிகளின் அமுதமொழிகளைக்கொண்டே போதுபோக்குமவர்கள் என்னைப்போலவே ஆங்காங்கு மற்றும் பலபலர் உள்ளார்களென்பதை அடியேன் நன்றாக அறிந்தவன். அவர்கள் நித்தியமும் ஒரு முறை இச்சிறு புத்தகத்தை வாசித்துவந்தால் இதுவே ஒரு நல்ல போது போக்காயிருக்குமென்று அடியேன் மனதிற்பட்டது போலவே அடியேனுடைய ஆப்த நண்பர் ஸ்ரீ உ.வே. (வக்கில்) S. ஸௌந்தரராஜய்யங்காருடைய திருவுள்ளத் திலும்பட்டபடியால் இதனை ஒரு அரிய பெரிய விருந்தாக உலகுக்கு அளிக்கின்றேன்.

ஸ்வாமிகளின் உபந்யாஸங்களைக்கேட்க பாக்கியமுள்ளவர்கள் தேவசபையில் அம்ருதம்பரிமாறி புசிப்பதுபோல் அனுபவிக்கிறார்கள். அளவு பார்த்து போதிக்கும் சக்தி ஸ்வாமிகளுக்கு விசேஷமானது. இப்புத்தகத்தில் கண் செலுத்துவோர் விஷயத்தில் குறிப்பாக இறங்கினால் மஹத்தான ஞானத்தையும் ஆனந்தத்தையும் அடைவார்களென்று உறுதிகூறுவேன்.

தாஸன்,

Rao Bahadur. R. Narasimha Iyengar,
Madura. 29—2—48.

ஸ்ரீ ரஸ்து:

# நற்போது போக்கு

## — ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் —

### காப்பு

வரவர முனியடி வணங்கும் வைதிகர்
திருவடி யிணைகளென் சிரமேற் சேர்கவே.

வடமொழியில் வழங்கும் காலக்ஷேப மென்கிற சொல்லுக்குத் தமிழில் போதுபோக்கென்பது பொருள். ஸ்ரீபாஷ்யம் ஸேவித்தல் பகவத்விஷயம் ஸேவித்தல் என்று சொல்லவேண்டிய ஸ்தானத்தில் ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபம் பகவத்விஷய காலக்ஷேபம் என்றே தொன்று தொட்டுப் பெரியார்கள் வழங்கிவருகிறார்கள். காலக்ஷேப மென்கிற சொல்லுக்கு 'ஸேவிப்பது' என்கிற பொருள் எப்படி கூடுமென்றும் இந்த ப்ரயோகம் எப்படி பொருந்துமென்றும் சில வ்யுத்பந்நர்கள் விமர்சிப்பதுண்டு. ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபமென்றால் ஸ்ரீபாஷ்யத்தைக் கொண்டு போது போக்குவது என்றுதான் பொருள. ஸ்ரீ ராமாயண காலக்ஷேபம் ஸ்ரீவசநபூஷண காலக்ஷேபம் இத்யாதிகளான ஸகல வ்யவஹாரங்களுக்கும் இதுதான் பொருள்.

இப்படி வ்யவஹரிக்கத் தொடங்கின பெரியார்களின் திருவுள்ளம் யாதெனில், விஷயங்களை க்ரஹிக்கிறோமோ இல்லையோ அது எப்படியாயினுமாகுக; நல்லபடியாகப் போதைப் போக்கினால் போதும்—என்பதேயாம்! ஆர்த்தியில் "முன்னவராம் நம் குரவர் மொழிகளுள்ளப் பெற்றோம் முழுதுநமக்கவைபொழுது போக்காகப் பெற்றோம்"

என்று மணவாளமாமுனிகள் பணித்தபடியே 'பெரியோர்களுடைய ஸ்ரீஸூக்திகளைக்கொண்டு போது போக்குவதென்பது ஜன்மாந்தர ஸஹஸ்ர நற்றவப்பயன்.

* காவ்ய சாஸ்த்ரவிநோதேந காலோ கச்சதி தீமதாம்,
அந்யேஷாம் து மநுஷ்யாணாம் நித்ரயா கலஹேந வா *

என்கிறச்லோகமொன்று யாவருமறிந்ததே. ஆங்காங்கு அவரவர்கள் தம்தம் போதுகளை எப்படி போக்கிவருகிறார்களென்று நாற்புறமும் பார்ப்போமாயின், உத்யோகஸ்தர்கள் வியாபாரிகள், பயிர்த்தொழிலாளர்கள், வக்கீல்கள் முதலானோருடைய போதுபோக்குகள் ஒருவிதமாக நிகழ்ந்து வருகின்றன. சிலபேர்கள் தேசவ்ருத்தாந்தப்பத்திரிகைகளைப் படித்தல், நாவல்களைப்படித்தல், சூது சதுரங்கமாடுதல்.... முதலிய காரியங்களிலே காலத்தைச் செலவிடுகிறார்கள். இது தவிர, நால்வர் எண்மர் பதின்மராகக்கூடி ஒரு காசுக்குமுதவாத வம்புவார்த்தைகளை வெகு அட்டஹாஸங்களுடன் பேசிக்கொண்டும், தங்கள் திரளிலே அந்வயிக்கப்பெறுமல் சுவடிகளிலும் பகவத் பாகவத பரிசர்யைகளிலும் போதுபோக்கிவரும் மஹான்களைப் பற்றி ஏதேனும் பறை சாற்றிக்கொண்டும் பத்துமணி காலத்தைப் பத்து நிமிஷமாகக் கழிக்கின்றவர்கள் சிறிய கிராமம் முதல் பெரிய நகரம்வரையில் எங்குமுள்ளார்கள். அன்னவர்கள் பெறுமானந்தம் அளவுகடந்தது.

ஆழ்வார்களுள் இரண்டு ஆழ்வார்கள் போதுபோக்கைப் பற்றி வெகு இன்பமாகப் பேசியுள்ளார்கள். திருமழிசையாழ்வாரும் நம்மாழ்வாரும். இவ்விருவருடைய இரண்டுபாசுரங்களை எடுத்துக்காட்டுகிறோம் காண்மின். திருமழிசையாழ்வார் நான்முகன் திருவந்தாதியில் (63) * தரித்திருந்தேனாகவே..............தேரித்தேழுதி வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது* என்றருளிய பாசுரம் ஒவ்வொருவரும் நிச்சலும் நினைக்கத்தக்கது. போதுபோக்கும் விதத்தை இவரைப்போல்

எடுத்துரைத்தவர் மற்றுயாருமில்லை. தெரித்தல் எழுதுதல் வாசித்தல் கேட்டல் வணங்குதல் வழிபடல் பூசித்தல் ஆகிய இவற்றினாலேயே தாம் போதைப்போக்கினதாகவும் இவையில்லையாயின் தம்மால் உயிர்தரிக்க முடியாதாகவும் வ்யக்தமாக விளம்பியுள்ளார்.

நம்மாழ்வார் அருளிச்செய்வதோ இதனினும் விலக்ஷணமானது; அதாவது பெரிய திருவந்தாதியின் முடிவில் (பா. 86) * கார்கலந்த மேனியான் கைகலந்தவாழியான், பார்கலந்த வல்வயிற்றான் பாம்பணையான்—சீர்கலந்த சொல் நினைந்து போக்காரேல் சூழ்வினையினாழ்துயரை, என்னினைந்து போக்குவரிப்போது, * என்றுள்ள பாசுரம் சுவைமிக்க பொருளுடைத்து. அப்பொருளைச் சிறிது விவரிக்கிறோம்; எம்பெருமானுடைய திருக்குணங்கள் நிரம்பிய ஸ்ரீ ஸூக்திகளை யநுஸந்தித்தால் பாவங்களும் துன்பங்களும் தொலையுமென்று சில பெரியார் நினைப்பதும் சொல்லுவதுமுண்டு; ஆழ்வார் என்ன சொல்லுகிறாரென்றால், பாவங்களும் துன்பங்களும் தொலைந்தால் தொலையட்டும் வளர்ந்தாலும் வளரட்டும், அதைப்பற்றி என்ன கவலை? இவ்வுலகில் நாம் வாழ்கிறவரையில் நம்முடைய போது போக வேண்டுமே; போதை எப்படி போக்குவது? பகவத்குணங்கள் மலிந்த ஸ்ரீ ஸூக்திகளைக் கொண்டுதானே போதைப் போக்கவேண்டும்; வேறு எதைக்கொண்டு போதைப்போக்குவது! ஒவ்வொருவனும் போதைப்போக்கியாக வேண்டுமே, குணாநுபவம் தவிர வேறு எந்தக்காரியஞ் செய்தால் போது போகும்? வேறொன்றாலும் போது போக்க வரிதன்றோ. சீர்கலந்த சொல்நினைந்து சூழ்வினையினாழ்துயரைப் போக்காரேல் போக்கா தொழிக; இப் போதை என்னினைந்து போக்குவர்! என்று அருளிச்செய்கிற அழகு என்னே!

உலகத்தில் ஒவ்வொருவனும் பகவத்குணாநுபவம் பண்ணியா போதைப் போக்குகிறான்? இல்லையே.

சூதுசதுரங்கமாடியும் உண்டியே உடையே உகந்தோடியும் மாரனார் வரிவெஞ்சிலைக்கு ஆட்செய்தும் மற்றும் பல பல செய்துமன்றோ அவரவர்கள் போது போக்கி வருவது. குணநுபவத்தால் போது போக்குவாராக ஒருவரையுங் கண்டிலோமே; "ஸாக்ஷாத்க்ருத ஸ்வபரவ்ருத்தாந்தர்க்கு" என்று ஆசார்ய ஹ்ருதயத்திலருளிச்செய்கிறபடி உலகியற்கை ஒன்றுதப்பாமலுணர்ந்தவரான ஆழ்வார் "என்னினைந்து போக்குவரிப்போது" என்று குணநுபவத்தாலன்றிப் போது போக்க முடியாதென்று ஏன் சொல்லுகிறார்? என்று அடியேன் ஒருநாள் ஜீயர் ஸ்வாமியைக் கேட்டேன்; அதற்கு இரண்டு கதைகள் ஸாதிக்கலாயிற்று.

(1) கள்ளங்கவடறியாத ஒரு ஸ்வாமி தம்திருமாளிகை வாசலில் தென்னைமரம் வளர்த்திருந்தார்; அதில் காய்கள் நிறையக் காய்த்திருந்தன. ஒரு நாளிரவு திருடன் மரத்தின் மீதேறிக் காய்களைப் பறிப்பதாக அவர் அறிந்துகொண்டு இரண்டு மைல் தூரத்திலுள்ள டாணுவுக்குச் சென்று போலீஸ் சேவகனை யழைத்துக்கொண்டு வர எண்ணினார். அங்குப் போய்வர ஒரு நாழிகை ஆகுமாதலால் அதற்குள் கள்ளன் இறங்கி யோடிப்போய்விட்டால் என்ன செய்வதென்றும் ஆலோசித்தார்; ஒரு உபாயம் தோன்றி அப்படியே செய்தார். உள்ளிருந்து பெருமாள் திருவாராதனத் தீர்த்தத்தைக் கொணர்ந்து மரத்தின் கீழே நிறையத் தெளித்துவிட்டு 'இது பெருமாள் தீர்த்தமாகையாலே இதை யாரும் மிதிக்கலாகாது' என்று உரக்கச் சொல்லிவிட்டு உடனே டாணுவுக்குச் சென்றார். 'தேங்காய்க் கள்ளனைக் கையும் பிடியுமாகப் பிடிக்கவேணும், கையோடு வாருங்கள்' என்று சேவகனையழைத்தார்! அதற்கு அவன் 'ஸ்வாமீ! கள்ளன் இன்னுமா மரத்தின்மேலேயே இருப்பான்? இதுவரையில் அவன் வீடு போய்ச்சேர்ந்திருப்பனே' என்றான். அதற்கு இவர் சொல்லுகிறார்—அம்மரத்தின் கீழ்ப்பாகம் முழுதும் பெருமாள்

தீர்த்தத்தைத் தெளித்துவிட்டு கள்ளன் காதிலும் கேட்கும் படி அதை உரக்கச்சொல்லிவிட்டன்றோ நான் வந்திருக்கிறேன்; பரிசுத்தமான அவ்விடத்தை மிதித்துப்போக முடியாதாகையாலே அவன் மரத்தின் மீதுதான் இருப்பன், வாருங்கள் என்றார். தம்மைமே யொப்பப் பிறரையும் நினைக்கிறபடியன்றோவிது.

(2) பரமைகாந்தியாய்ப் பரமவைதிகரான வொரு ஸ்வாமி இரவில் சயனிக்கும்போது தம் தேவியையழைத்து 'அடீ! சொம்பிலே ஜலம் வைக்காதே; கவிழ்த்து வை' என்று கட்டளையிடுவராம். இவரது கருத்து என்னெனில்; இரவிலே கள்ளன் வந்தால் சொம்பைக் கொள்ளைகொள்ள நினைத்து அதனருகேவந்து அதை யெடுக்கப் பார்க்கும்போது, கையலம்பாமல் சொம்பைத் தொடலாகாதென்று தீர்த்தம்தேடுவனும்; தீர்த்தம் கிடைத்தால் கையை யலம்பிக்கொண்டு சொம்பைக் கவர்ந்து கொண்டு செல்வனும்; தீர்த்தம் கிடையாவிடில் அசுத்தமான கையாலே சொம்பை எப்படி எடுப்பதென்று கூசி சொம்பைத் தொடாமலே போய்விடுவனும்; இதற்காகவே "சொம்பில் ஜலமின்றிக் கவிழ்த்துவை" என்று தேவிக்குக் கட்டளையிடுவதாம்.

இதெல்லாம் ப்ராசீந ப்ராமாணிகர்களின் சரிதைகள். தங்களுடைய ஆசாரமே கள்ளர்க்கும் உள்ளதாக அவர்கள் நினைப்பதுபோல் ஆழ்வாரும் பகவத் குணாநுபவத்தாலன்றி மற்றெதனாலும் தமக்குப் போதுபோக்க அரிதாயிருக்குமியல்வையே உலகில் எல்லாருக்குமுள்ளதாக நினைத்து "சீர்கலந்த சொல்நினைந்து போக்காரேல் சூழ்வினையினாழ்துயரை, என்னினைந்து போக்குவர் இப்போது" என்று உள்ளமுருகவருளிச் செய்கிறார். ஸ்ரீராமாயண பாரதாதி இதிஹாஸங்களைக்கொண்டும் ஸ்ரீவிஷ்ணு புராணம் முதலிய புராணங்களைக்கொண்டும் அருளிச்செயல்களைக்கொண்டும் பாவத்தைப் போக்கிக்கொள்ளார்

களாகில் அதுபற்றி விசாரமில்லை; போதைப்போக்கு வதற்கு இவையொழிய வேறு என்ன ஸாதனமுள்ளது! என்று கூறின ஆழ்வாரை வழிபடுகின்ற நாம் நம்முடைய போதை எப்படி போக்க ஆசைப்படவேணுமென்று இன்னமும் விவரிக்கவேணுமோ?

## இரண்டாம் அதிகாரம்.

* நலத்தால் மிக்கார் என்றும் * கலையிலங்குமொழியாளர் என்றுமுள்ள ஸ்ரீஸூக்திகளுக்கு லக்ஷ்யபூதர்களாய் விளங்கும் மஹநீயர்களைக்குறித்து * அசக்தாஸ் தத்பதம் கந்தும் ததோ நிந்தாம் ப்ரகுர்வதே * என்கிறபடியே நிந்தை மொழிகளைப் பலவகைகளாலும் பரவச்செய்துகொண்டு அதுவே போதுபோக்காக இருப்பவர்களைக் குறித்து இங்கு நாம் விஜ்ஞாபிக்கவேண்டியதொன்றுமில்லை. ஈச்வரனுடைய ஜகத் ஸ்ருஷ்டியானது மிக விசித்திரமானது. பொய் சொல்வது களவு செய்வது வஞ்சனை பண்ணுவது முதலான தீய குணங்களையும், அஹிம்ஸை இந்த்ரிய நிக்ரஹம் க்ஷமை ஸத்யம் முதலிய நற்குணங்களையும் ஒவ்வொரு க்ராமத்திலும் ஒவ்வொரு நகரத்திலும் நாம் பார்த்துவருகிறோம். நற்குணங்களோ தீயகுணங்களோ அவரவர்கட்கு இயற்கையாக அமைகின்றனவென்பதே பெரும்பான்மையான கொள்கை. வேம்புக்குள்ள கசப்பும் மாதுளைக்குள்ள புளிப்பும் கரும்புக்குள்ள தித்திப்பும் முதலியன எப்படி ஒரு நாளும் மாறுவதில்லையோ அப்படியே மனிதர்களுக்கும் ஜன்மஸித்தங்களான குணங்கள் (நல்லவையோ தீயவையோ) போக்கவும் போகா என்றே பெரியார் கூறுவர். இளமையில் பொய் சொல்லியும் களவாடியும் வழக்கம் பெற்றவர்கள் அந்த வழக்கத்தை ஒரு நாளும் விடமுடிகிறதில்லையென்பதையும், இயற்கையாகவே ஸத்யம் முதலிய நல்ல குணங்கள் அமையப்பெற்றவர்கள் ஒரு நாளும் அஸத்யவழியில் செல்கின்றிலர் என்பதையும் எந்தவூரிலும் எந்த ஜாதியிலும் எக்காலத்திலும் பார்க்க

லாம். ஆகவே * பச்யதி பரேஷு தோஷாந் அஸதோபி, ஸதோபி நைவ குணாந், விபரீதமிதம் ஸ்வஸ்மிந், மஹிமா மோஹாஞ்ஜநஸ்யைஷ: * என்று தேசிகன் ஸாதித்தபடி பிறரிடத்தில் இல்லாத தோஷங்களை இருப்பனவாகக் காண்பதும் இருக்கின்ற குணங்களை இல்லை செய்வதும், தம்மிடத்தில் உள்ள தோஷங்களைக் காணுமல் இல்லாத குணங்களை இருப்பனவாக ப்ரமிக்கையுமாகிற இந்த மஹாஸம்பத்தை மோஹாஞ்ஜந மஹிமையினுல் சிலர் இயற்கையாகவேபெற்று வாழ்கின்ருர்களென்றும் அதற்குத்தகுந்தபடி அமையக்கூடிய அவர்களது போது போக்கை மாறுபடுத்த மாதவனுலுமசாதென்றும் இதை யும் நாம் எங்கும் அநுபவத்திற் காணுகின்ரும்.

ஆனுல் இங்கு நாம் தெரிவிக்க விரும்புகின்றதென்ன வென்ருல், கேண்மின். யானையும் குதிரையும் பெருமாள் புறப்பாட்டுக்கு கம்பீரமாக உபயோகப்படுவது போல மற்ற ஜந்துக்கள் ஏன் உபயோகப் படுவதில்லையென்று ஒருவர்கேட்டால் இதற்குஎன்ன பதில் சொல்லுவது? யோக்யதைக்குத் தகுந்தபடி உபயோகம் நேர்கின்றது என் றிவ்வளவே சொல்லமுடியும். நல்ல வழிகளில் போது போக்க யோக்யதையற்றவர்கள் ஏதோவொரு வழியில் தங்கள் போதைப் போக்கித்தானே யாகவேண்டும். குயிலும் காக்கையும் பெரும்பாலும் வடிவில் ஒத்திருக்கச் செய்தேயும் செய்கையில் ஏன் ஒத்திருக்கவில்லை யென்று யாரை யார் கேட்பது? அதுபோல, சிலர் சீர்கலந்த சொல் நினைந்து போதுபோக்காதே தங்களுக்கு ஸுலபஸாத்ய மான வகையில் போதுபோக்கி வருகின்ருர்களென்ருல் இதில் வியப்பு ஒன்றுமில்லையே. ஸத்துக்களையும் ஸாதுக் களையும் நிஷ்காரணமாகப் பழிப்பதையே போதுபோக் காகக்கொண்டவர்கள் சிறிது விவேகிகளாயிருந்தால் ஒன்று ஆலோசிக்கவேண்டும்; மஹான்களைப்பற்றித் தாங்கள் செய்யும் நிந்தைகளினுல் தங்களுக்கு ஜன்ம ஸாபல்யமாகிற வொரு லாபம் ஸித்தித்தாலும் அந்த

மஹான்களுக்கு என்ன நஷ்டமுண்டாகு மென்பதை மாத்திரம் சற்று விமர்சிக்கவேணுமவர்கள்

## மூன்றும் அதிகாரம்

திருவாய்மொழியில் நம்மாழ்வார் அற்புதமாக ஒரு பாசுரம் அருளிச் செய்கிறார்; அதாவது (5–3–5) *கடியன் கொடியன் நெடியமால் உலகங்கொண்டவடியன், அறிவரு மேனி மாயத்தன் * இத்யாதி. இதன் பொருளின்பத்தைச் சிறிது விவரித்து அடியேனும் ஆனந்தித்து பக்தர்களையும் ஆனந்திக்கச் செய்கிறேன். ஆழ்வார் ஆண்மை நீங்கிப் பெண்மையடைந்து பேசும் பாசுரமிது. பராங்குசநாயகி யென்று இப்போது ஆழ்வார்க்குத் திருநாமம். இப் பெண் பிள்ளைக்கும் தோழிக்கும் பேச்சு நடந்து வருகிறது. தோழியானவள் இப்பெண்மணியை நோக்கி "பேதாய்! நீ பகவான் பகவானென்று எப்போதும் வாய் வெருவி வீணாகவருந்துகிறாயே; இந்த கஷ்டம் உனக்கு ஏதுக்காக? அவன் குணசாலியாயிருந்தால் அவனிடத்தில் நீ எவ்வளவும் ஈடுபடலாம்; குணஹீநனான அவனிடத்தில் நீ வீணாக ஆசைவைத்துத் தவிப்பது வேண்டாமே" என்று கூறினளாக, அதற்குப் பராங்குச நாயகி மறுமொழி கூறுகின்றாளிப்பாட்டினால். தோழீ! எம்பெருமானை நான் மஹாகுணசாலியென்கிறேன், நீயோ அவனை குணஹீந னென்கிறாய். நான் சொல்லுகிறபடியன்றிக்கே நீ சொல்லுகிறபடியே குணஹீநனானாலும் என் நெஞ்சம் அவனையல்லது அறியாது, அவனிடத்தில் நின்றும் என்னை மீட்பதற்காகவன்றோ நீ அவனை குணஹீநனென்பது. மிகவும் ஸந்தோஷம். குணஹீநனென்பதுபற்றியே அவனை நான் மேல் விழுந்து விரும்புகிறேனென்று திண்ணமாகக் கொள்ளவேணும்நீ அவனிடத்தில் குணமில்லை யென்பதைச் சொல்ல வேண்டுமானாலும் தோழீ! நான் சொல்லவேணுமேயல்லது நீ சொல்லலாகுமோ? அவனையும் என்னையும் கூட்டிவைத்தது மாத்திரமேயன்றோ உன்

காரியம்; அவனோடு உள்கலந்து பரிமாறினவள் நானே யல்லது நீயல்லையே; அவனிடத்திலுள்ளது தோஷமோ குணமோ எதுவானாலும் எனக்குத் தெரிந்தவளவு உனக்குத் தெரிய ப்ரஸக்தியில்லையே. ஆகையாலே குணமில்லாமையையும் தோஷமுடைமையையும் என்வாயால் நான் சொல்ல நீ கேளாய் என்று பீடிகைபோட்டுக்கொண்டு * கடியன் கொடியனென்று தொடங்கி இரண்டடிகளாலே அவனுடைய குணக்கேட்டைச் சொல்லுகிறாள் பராங்குச நாயகி (ஆழ்வார்).

சொல்லுகிற குணக்கேடுகள் எவை யென்னில்; கேண்மின்;- [கடியன்.] தன்காரியத்தை ஸாதித்துக்கொள்வதிலே கனவேகமுடையவன். அதாவது, தனக்கு விருப்பமுண்டானால் தானேவந்து மேல்விழுந்து விரைந்து கலக்குமவன் என்கை. [கொடியன்] எதிர்த்தலைபடுகிற கஷ்டம் பாராதே கல்நெஞ்சனாய்ப்பிரிந்து போமவன். [நெடியமால்] மிகவும் பெரியவன என்பது இச்சொல்லின் பொருள். இதன் கருத்தாவது, மேல்விழுந்து கலக்கும்போது பிரியவேணுமென்று நினைப்பன். அப்படி அவன் நினைத்ததையறிந்து 'என்னையனே! பிரியலாகாது பிரியலாகாது' என்று கால்கட்டி விலக்கப்பார்க்கலாமே, அப்படி விலக்குவதற்குக் கூசி நடுங்கி அஞ்சியிருக்கவேண்டும்படி திடரென்று பரத்துவம் பாராட்டி நிற்பவனென்கை. [உலகங்கொண்ட வடியன்] பிறருடைமையைத் தனக்காக்கிக் கொள்ள நினைத்தால் பின்னை அவர்களுக்கு ஒன்றும் மிச்சப்படாதபடி பண்ணி அவர்களைப் பாதாளத்திலே தள்ளுமவன். [அறிவருமேனிமாயத்தன்] வடிவைக்கண்டால் ஸர்வஸ்வதானம் பண்ணவிருக்கிறானோ? அன்றி ஸர்ஸ்வமும் கொள்ளைகொள்ள விருக்கிறானோவென்று தெரிந்து கொள்ள முடியாதபடி ஆச்சரியமான தன்மையையுடையவன். அடியேன் குடியேனென்று சில சொல்லி மயக்கிக் கண்ணிலே மணலைத்தூவி யோடிப்போமவன்,.

இப்படிப்பட்ட குணக்கேடுகளைக் கோடிக்கணக்காகச் சொல்லவேணுமானாலும் நானன்றோ சொல்லவேணும், எனக்கன்றோ மருமம் தெரியும். தோழீ! இவை உன்னாலும் சொல்லமுடியாது, இதற்கென்றே இட்டுப்பிறந்த சிசுபாலாதிகளாலும் சொல்லமுடியாது. இவ்வளவு குணக்கேடுகளையும் நான் அறிந்துவைத்தேயன்றோ இவ்விஷயத்திலீடுபட்டுக்கிடக்கிறது. இவை தோஷங்களேயாகிலும் அவனுடைய தோஷங்களாகையாலே அவன் ஸம்பந்தத்தையிட்டு இவை நமக்கு உபாதேயங்களேயென்று என்னெஞ்சுகொள்ளுகின்றது; (அல்லது) கீழ்ச்சொன்ன விசேஷண பூதங்களான குணக்கேடுகளில் நோக்கு இல்லாமே விசேஷ்ய பூதனான அவனேமாத்திரமே என்னெஞ்சு பற்றியிருக்கின்றது. மாயாவாதிகள் "நிர்விசேஷ சிந்மாத்ரம் ப்ரஹ்ம" என்று விசேஷண ஸம்பந்த கந்தமுமற்ற விசேஷ்ய அம்சத்தை மாத்திரமே அங்கீகரிக்கிறாப்போலே குணமோ குணக்கேடோ ஆகிய விசேஷணாம்சத்தில் கண் செலுத்தாமல் வெறும் விசேஷ்யமான அவனளவில் மாத்திரமே என்னெஞ்சு ஊன்றியிருக்கின்றது என்பதாக [ஆகிலுங் கொடியவென்னெஞ்சம் அவனென்றே கிடக்குமெல்லே] என்கிற மூன்றாமடி அமைந்தது.

உலகர்களே! இது எம்பெருமான் விஷயத்தில் மாத்திரமன்று, அன்பு உள்ள விடங்களிலெல்லாம் இப்படித்தான் பரிமாற்றமுள்ளது. அன்பு வைத்திருப்பாருடைய அன்பைக் குலைக்கவேணுமென்று நினைத்து எவ்வளவு தோஷங்களை நிரூபணம் செய்தாலும் "ஊரவர் கவ்வையெருவிட்டு" என்ற கணக்கிலே மெய்யன்பருடைய அன்பு மேன்மேலும் பெருகுவதற்கு ஹேதுவாகுமேயல்லது தோஷ நிரூபணங்களினால் அபூர்வமாக எதுவும் ஸித்திக்கமாட்டாதென்பது திண்ணம்.

இவ்வுலகில் பிறக்கின்றவர்கள் யாவரும் தோஷமே நிரம்பியவர்கள் என்றாவது, குணமே நிரம்பியவர்கள்

என்றுவது யாரும் சொல்லமுடியாது. உயர்ந்த பதவியில் இருக்கின்ற மஹான்கள் முதற்கொண்டு மிகவும் தாழ்ந்திருப்பவர்கள் வரையில் யாரை யெடுத்துக்கொண்டாலும் ஒவ்வொருவரிடத்திலும் குணங்களும் தோஷங்களும் கலந்திருக்குமேயல்லது பரிபூர்ண குணசாலியாகவும் பரிபூர்ண துஷ்டனாகவும் ஒரு மனிதனையும் காட்டமுடியாது.

எவரும் அயலாரை வஞ்சித்து விடலாமானாலும் தம்முடைய ஆத்துமாவைத் தாம் வஞ்சித்து விடமுடியாதாதலால் தம் தம்மிடத்திலுள்ள குண தோஷங்களை உள்ளபடி அவரவர்கள் கட்டாயம் அறிந்தேயிருப்பார்கள். அப்படியறிந்திருந்தும், உள்ள குணங்களை மிகவும் அதிகப்படுத்திக் காட்டுவதற்கும், உள்ள தோஷங்களை அடியோடு மறைத்துக்கொள்வதற்குமே ஒவ்வொருவரும் முயற்சி செய்வது வழக்கம். அதில் ஸாமான்ய ஜனங்கள் ஏமாந்து போய்விடுவதும் நிபுணர்கள் உண்மையை அறிந்து கொள்வதும் உண்டு.

பொதுவில் ஒவ்வொருவருடைய நோக்கமும் எப்படிப் பட்டதென்றால் 'நம்மிடத்தில் எல்லாருக்கும் நல்ல மதிப்பு உண்டாகவேணும்; நம்மை நல்ல குணசாலியென்றே எல்லாரும் கொள்ளவேண்டும்; நம்மிடத்தில் தீமையிருப்பதாக யாரும் கருதக்கூடாது' என்றே ஆசை கொண்டு அதற்கு ஏற்றப்போல் நடந்துகொள்வதிலேயே பெரும்பாலும் ஜனங்களின் நோக்கம் காண்கிறது.

ஞானம், செல்வம், அழகு முதலானவை மிகச் சிறிதளவு இருந்தாலும் அவற்றை மிகவும் அதிகமாகவே காட்டிக்கொள்ள விரும்புவாரும் உண்டு. அவை அதிகமாகவே யிருந்தும் அவற்றை டம்பமாகக் காட்டிக்கொள்ள விரும்பாமல் வெகு அடக்கத்தோடு இருப்பவர்களும் உண்டு. சிலபேர்கள் தங்களுடைய நிலைமையை நன்றாகத் தெரிந்துகொண்டு 'நாம் எப்படி குற்றங்களுக்குக் கொள்கல

மாக இருக்கிறோமோ இப்படித்தான் உலகில் பலரும் இருக்க நேரிடும்; இவ்வுலகுக்கு இது ஆச்சரியமன்று; ஆதலால் பிறருடைய குற்றங்களைப்பற்றி நாம் கவனிப்பது வேண்டா' என்றுகொண்டு பிறரது குற்றங்களில் சிறிதும் புத்தியைச் செலுத்தாமல் தங்கள் காரியத்தோடே நிற்பர்கள். இப்படிப்பட்ட அதிகாரிகள் அதிகமாகத் தேற மாட்டார்கள். நூற்றில் ஒருவர் தேறினல் விசேஷம். 99 பேர்களின் இயல்வு எப்படிப்பட்டதென்றால் தம்முடைய நிலைமையைத் தாம் அடியோடு மறந்து எப்போதும் பிறரைப்பற்றிய பழிப்புரையே போது போக்காக இருப்ப தாம். அன்னவர்கள் வாய்கொண்டு பேசத்தொடங்கினலும் கை கொண்டு எழுதத்தொடங்கினலும், இன்னரைப்பற்றி இன்னவிதமாகத்தான் பேசுவார்கள் எழுதுவார்கள் என்கிற வரம்பு சிறிதும் இராது. ஒன்றுமறியாத மூடர்களை உயரத் தூக்கி வைத்திடவும் புகழ்பெற்ற பெரியோர்களைப் பாதாளத்திலே தள்ளிவிடவும் அவர்கள் வல்லமை வாய்ந்தவர்கள்.

இந்த இயல்வு நேற்று இன்று ஏற்பட்டதன்று. ஸ்ரீ ராமக்ருஷ்ணாதி அவதார காலங்களிலும், ஸ்ரீமந் நாதயாமுந யதிவராதி ஆசாரியர்களின் காலங்களிலுமே இப்படிப்பட்ட அதிகாரிகள் மிகவும் மலிந்திருந்தார்க ளென்றால் இக்காலத்தில் இருக்கக் கேட்கவேணுமோ? இப்படிப்பட்டவர்கள் நிறைந்திருப்பது இந்த லீலா விபூதிக்கே ஒரு அழகு. அவர்கள் விஷயத்தில் யாரும் வெறுப்புக்கொள்ளலாகாது. உலகுக்கு மஹோபகாரம் செய்பவர்களாகவே அவர்களைக் கருதுதல் வேண்டும்.

## நான்காம் அதிகாரம்

'நம்மை எல்லாரும் பூஷிக்கவேணுமேதவிர ஒருவரும் நம்மை தூஷிக்கக்கூடாது' என்று விரும்பி, பூஷணைகளையே ஆவலுடன் எதிர் பார்ப்பதும் தூஷணைகள் வருங்கால்

மிகவும் வருந்துவதும் சிலருடைய இயல்வாதலால் அதைப் பற்றியும் இங்கு நாம் முக்கியமாகச் சில சொல்ல விரும்புகிறோம்.

தூஷிக்கவேண்டிய காரணம் பூர்த்தியாக இருந்தாலுங் கூட தூஷிக்கும் வழியைக் கனவிலுமறியாமல் பூஷிப்பதே செய்வார் சிலர். பூஷிக்கவேண்டிய காரணம் பூர்த்தியாக இருந்தாலுங்கூட தூஷிப்பதையே தொழிலாகக் கொள்வர் பலர்; எங்கும் தூஷிப்பவர்கள், பலபல மஹான்களால் கொண்டாடப் படுகின்றவர்களைத்தான் தூஷிப்பார்கள். யோக்யதை யில்லாதவர்களை தூஷிப்பதனால் எப்படி த்ருப்தியுண்டாகும்? அதை யார் கவனிப்பார்கள்? அது பயனற்ற பணியாகுமே. நிறைப் பழங்கள் பழுத்துத் தொங்கப்பெற்ற மரங்களின்மீது கல்லடி தடியடி விழுமேயல்லது மொட்டை மரத்தையும் மலட்டு மரத்தை யும் அடிப்பாரார்? அதுபோல், ஞானுட்டானங்கள் நிரம்பியும், பலவகைகளில் புகழ்பெற்றும், பலரால் வணங்கப்பட்டும் விளங்குகின்ற மஹான்கள் பேரில்தான் தூஷணைகள் ஏற்படுமேயல்லது; 'யாரோ வழிப்போக்கன்' என்னும்படியான ஸாமான்ய ஜனத்தின் மீது பைத்தியக் காரன்கூட தூஷணைகள் செய்ய மனங்கொள்ளமாட்டான்.

ஆகவே, எந்த நபரின்மீது விசேஷ தூஷணைகள் ஏற் படுகின்றனவோ அதுவே காரணமாக அந்த நபர் மிக்க பெருமை வாய்ந்தவர் என்பது உறுதியாகும். உண்மையில் அவர் பெருமைவாய்ந்தவராக இல்லாவிடினும், தூஷணைகள் ஏற்படுவது காரணமாகவே அவர்க்குச் சிறந்த பெருமை அவசியம் ஒப்புக்கொள்ளவேண்டியதே. அமுதனார் அரு ளிய இராமானுச நூற்றந்தாதியில் "பழிக்கில் புகழ்" என் றொரு வாசகம் இருப்பது பிரசித்தமே. அதன் பொருளையே இங்கு நாம் விவரித்தோம்.

மஹான்களைப் பிறர் தூஷிப்பதானது உண்மையில் பூஷிப்பதாகவே முடிவுபெறும். அவர்களுடைய கீர்த்தி எங்கும் நன்றாகப் பரவுவதற்கு தூஷணைகளே பெரிய கருவியாகும். பூஷிப்பது ஒரு மூலையில் அடங்கிப்போகும். தூஷிப்பதுதான் உலகமெல்லாம் பரவும். பாகவத தூஷணையாக ஒருபுத்தகம் வெளிவந்தால் அது எத்தனைபக்கமாயிருந்தாலும் எவ்வளவு வேலையிருந்தாலும் விட்டுவிட்டு வெகு ரஸமாக வாசிக்க ருசியுண்டாகும். 'மெய்ஞ்ஞான விளக்கம்' என்று ஒன்று வெளிவந்தால் அது நாலே பக்கமாயிருந்தாலும் வாசிக்கத்தொடங்கும்போதே கண்ணுறக்கமதாகும். உலகப்போக்கு இது. ஓரிடத்தில் இருவர்கூடி ஒரு மஹானைப்பற்றிப் புகழ்ந்து பேசிக்கொண்டிருந்தால் அங்கு மூன்றாவது நபர் வந்துசேருவது மிகவும் அரிது. அதுவே ஒரு மஹானைப்பற்றி தூஷிக்குமிடமாயிருந்தால் நாலு நிமிஷத்தில் நானூறுபேர்கள்கூடிப் பிரளயமாகும். இயற்கையாகவே ஸகலஜனங்களுக்கும் பரதூஷணைகள்செய்வதிலும் அவற்றை ஆதரவோடு கேட்பதிலுமே விருப்பம் செல்லும். இவ்வியல்வுக்குத் தப்பிப் பிழைப்பவர் யாரோ சிலர். ஸ்ரீராமாயண கதைகளில் ஒரு சிறிதும் தெரிந்து கொள்ளாதவர்களும் 'ராமன் வாலிவதம்செய்தது மிகவும் தப்புத்தான்' என்று தூஷியாமலிருப்பதில்லை. ஸ்ரீபாகவதம் ஸ்ரீ விஷ்ணுபுராணம் ஹரிவம்சம் முதலானவற்றில் ஒரு வரியும் காணாதவர்களும் கேளாதவர்களுங்கூட 'கிருஷ்ணன் கோபிகளோடு விளையாடினது மிகவும் பிசகுதான்' என்று தாராளமாகத் தூஷித்தே தீருவர்கள். [அங்ஙனம் தூஷிப்பவர்களிடத்தில்தான் பகவானுக்கு மிகவும் உகப்பு என்று நூல்கள் முறையிடுகின்றன.]

ஸ்ரீராமபிரானுடைய பெருமைகளை விளக்கினது யார்? என்று கேட்டால், இராவணன் என்று தான் விடைகூறுவார்கள். கண்ணபிரானுடைய பெருமைகளை விளக்கினது யார்? என்று கேட்டால், கம்ஸன், சிசுபாலன் என்றுதான் விடை கூறுவார்கள். இத்தகைய பெரும் பாக்கியம் ராவண

சிசுபாலாதிகளுக்குத் தவிர லக்ஷ்மணன், மாருதி, விபீஷணன் போல்வாருக்கும் நேரவில்லை. இவ்வுலகம் நீடூழி வாழ்வதற்கே ராவண சிசுபாலாதிகள் காரணமாயினர். கூரத்தாழ்வானுக்குப் பெருமை விளைத்தவர் நாலூரான். நம்பிள்ளைக்குப் பெருமை விளைத்தவர் துன்னுபுகழ்க் கந்தாடைத் தோழப்பர். இப்படியே ஒவ்வொரு மஹானுடைய பெருமையையும் விளக்குதற்கு அவ்வக்காலங்களில் பலபல பெருந்தகையாளர் தோன்றிக்கொண்டே வருகின்றனர்.

அவர்கள் செய்யும் தூஷணைப் பிரசாரங்களைக் கண்டு சிலபேர்கள் வெறுப்பதும் வருந்துவதும் மிகவும் பிசகு. எந்த மஹானைப்பற்றித் தூஷணைகள் ஏற்படுகின்றனவோ, அந்த மஹான் சிறிதும் வருந்தமாட்டார். வெறுக்கமாட்டார். ஆனந்தம்! பரமானந்தம்!! என்றே உண்மையாக உள்ளங்கனிந்திருப்பர்.

சொல்லுகின்ற (அல்லது) எழுதுகின்ற நிந்தனைகள் யாவும் இவ்வுலகத்தவர்க்கு ஸம்பாவிதமேயல்லது அஸம்பாவிதமல்லவே. உள்ள தோஷங்களை யெடுத்துக் கூறுவார்களேயல்லது இல்லாத தோஷங்களை ஒருநாளும் ஒருவரும் எடுத்துக்கூறார். ஐயோ! நம்முடைய தோஷங்கள் பிறர்க்குத் தெரிந்து விட்டனவே! என்று வருந்தலாகாது. 'நாம் மறந்தும் மறைத்தும் இருந்த தோஷங்களை தெய்வாதீனமாக வெளிப்படுத்தி நமக்கு நன்மையுண்டாகும்படி மஹோபகாரம் செய்தார்களே!' என்று உள்ளூறக் களிக்க வேணும்

## ஐந்தாம் அதிகாரம்

நாம் நம்முடைய தோஷங்களையே எப்போதும் அநுஸந்தானம் செய்து கொண்டிருக்க வேணுமென்று பெரியாரிடம் கேட்டு அறிந்திருந்தும் அதை மறந்து, நம்மிடத்தில் இல்லாத குணங்களையே நாம் வெளியிட்டுக்

கொண்டும் குற்றங்களை மறைத்துக்கொண்டும் தவறுத லாகப் போது போக்கி வருகிறோம். இந்நிலைமையில், நமது குற்றங்குறைகளை உண்மையாகச் சிலர் எடுத்து வெளி யிட்டால் இதனில் விஞ்சிய மஹோபகாரம் வேறு என்ன வுளது? அவர்கட்கு * பொன்னுலகாளீரோ புவனிமுழு தாளீரோ * என்று உபயவிபூதியையும் பரிசளித்தாலும் போதாதே. சிகித்ஸை செய்பவர்கள் தற்காலத்தில் நமக்கு எவ்வளவோ கொடுமையை விளைத்தாலும் அதை நாம் நன்மையாகவேகொண்டு நூறுமாயிரமும் பரிசளிப்பது போலவே இந்த நிந்தனைநிபுணர்களுக்கும் வாஸ்தவமாய் எவ்வளவோ பரிசளிக்கவேண்டுமே.

"யதாசக்தி நிக்ருஹ்ணீயாத் தேவதா குரு நிந்தகாந்" என்றதும் ஸாமாந்ய சாஸ்த்ரமே. விசேஷ சாஸ்திரங்களின் உபதேசம் எப்படிப்பட்டதெனில்; நிந்தனை செய்வாரை நிச்சலும் பூஜிக்க வேணுமென்பதேயாம். பூஜிக்க ஸௌகரி யப்படாவிடினும், அவர்கள் செய்யும் நிந்தனைப் பிரசாரங் களைத் தீமையாகக் கொள்ளாமல் நன்மையாகக் கொண்டு நெஞ்சில் உபகாரஸ்ம்ருதி நடந்தால் அவ்வளவே போது மானது.

நம்மைப்பற்றிப் பிறர் செய்வது தூஷணையே யானாலும் அது நமக்கு எவ்வளவு நன்மை பயக்கின்ற தென்பதை ஊன்றி கவனிக்கவேணும். ஒரு மூலையிலிருக்கின்ற நம்மைப் பலபேர்கள் திருவுள்ளத்திற் கொள்ளும்படி செய்கிறார்களே யென்று மகிழவேண்டும். வாயால் தூஷித்து விடுவதோடு நில்லாமல் பத்திரிகைகள் மூலமாகவும் நிந்தனைகளைப் பரவச் செய்பவர்கள் பக்கலில் நாம் வஹிக்கவேண்டிய உபகார ஸ்ம்ருதிக்கு அளவே கிடையாது.

'வஸிஷ்டஸ் ஸமாநாநாம் பவதி' என்று வேதபுருஷன் அநுக்ரஹித்த கட்டளையிலே சிலர் ஸஜாதீயர்களுக்குள்ளே மேம்பட்டு யாவரும் வந்தடி வணங்கி நிற்க நேர்ந்தால் அது

கண்டு பொறுத்திருப்பதென்பது எளிதான காரியமோ? எப்படி பொறுத்திருக்க முடியும்? ஒரு நாளும் பொறுத்திருக்க முடியாது. * பரகீய யசோக்நிதஹ்யமாநா: * என்கிற ச்லோகம் ப்ரஸித்தமன்றோ. பிறர்க்கு ஒரு கீர்த்தியுண்டானால் அது பெரிய காட்டுத்தீயன்றோ; அதனால் கதுவப்படாமல் யாரால் வாழமுடியும். இதை யெழுதுகிற நம்மோடு பிறரோடு வாசியற உலகம்முழுவதும் பெரும்பாலும் பொறாமைக்கு இருப்பிடமே. ஸ்ரீ பெரும்பூதூரில் கீர்த்தி மூர்த்தியான குண்டலம் ஸ்வாமி யென்றும் மற்றொரு ஊரில் மற்றொரு ஸ்வாமி யென்றும் சொல்லப்படுகிற யாரோ சில மஹான்கள் இந்நிலத்தில் தப்பிப் பிறந்தவர்கள். நம்போன்ற பூரியர், 'பக்கத்தகத்துக்காரர் வாழ்ந்தால் பத்து பட்டினி' என்கிற பழமொழியின்படியன்றோ பொறாமையே வடிவெடுத்துப் பிறந்திருப்பது. பெருமை பெற்றவர்களென்று விளங்கும் பெரியாருடைய பெருமைகட்குக் குறைபாடு விளைக்க வேணுமென்று கருதியும், இன்னம் எவ்வளவோ ஆச்சரியமான எண்ணங்கள் கொண்டும் ஸதாகாலமும் இதுவே ஞாபகமாய், இரவும் பகலும் வேறொரு வேலையுமின்றிக்கே, பெரியகோட்டை பிடிப்பாராகவும், உலகையே தம் கைப்படுத்துவாராகவும், ஸகலஸித்தியும் பெறுவாராகவும் எண்ணி, நித்தியமும் வீதிகள்தோறும் திண்ணைகள்தோறும் குழாங்கூடி தூஷணைகளை வழங்கி வருகிறார்களல்லவா? இக்காரியத்தை அவர்கள் எந்த எண்ணத்தோடு செய்கிறார்களென்பதைப் பற்றி நாம் கவனிக்கத் தேவையில்லை. அவர்களது எண்ணம் எதுவாயினுமாகுக. இக்காரியம் அவர்களுக்குச் சிறந்த நன்மையையே தரக்கூடியதென்பதில் சந்தேகமில்லை. மேன்மேலும் அவர்கள் இதில் நல்ல உற்சாகத்தோடும் விடாமுயற்சி யோடும் இருந்து வரும்படிக்குச் பக்தவர்க்கங்கள் யாவரும் காப்பிடக் கடமைப்பட்டவர்கள்.

ஐயோ! அவர்கள் செய்வது தூஷணையல்லவோ என்று யாரும் நினைக்கலாகாது, இகழலாகாது, வருந்தலாகாது,

பிரதி செய்ய நினைக்கலாகாது. நாம் நூற்றுக் கணக்காகப் பணம் கொடுத்துச் சேவகர்களை நியமித்தாலும் இவ்வளவு நலமான காரியம் நடைபெறாது. ஒரு வ்யக்தியின் திரு நாமத்தை ஆங்காங்கு மூலை முடுக்குகளிலுள்ளவர்களும் பல பேர்களாகக் குழாங்கூடிச் சிந்தனை செய்யும்படியாகப் பெரு முயற்சி செய்து வருகின்ற பெரியார்கட்கு நித்ய ஸ்ரீர் நித்யமங்களமென்று பல்லாண்டு பாடுவதே பாங்காகும்.

ஸங்கல்பஸூர்யோதயம் என்கிற நாடகம் தேசிகர் பணித்தது ப்ரசித்தமே. அதில் ஐந்தாவது அங்கத்தில் அஸூயா தேவி யென்பவள் வந்து கூறுகிற வார்த்தையை ஆசாரியர் அழகாக எடுத்து இயம்பியுள்ளார். விவேக சக்ர வர்த்திக்கு மஹாமோஹ மஹாராஜன் பகைவன்; இவனுடைய மனைவிக்கு துர்மதி யென்று பெயர்; அவளுடைய தோழிதான் அஸூயை யென்பவள். அவள் கூறுகின்றாள்— *மயி தத்தாவதாநாயாம் விச்வதோஷாபஹாரிணு, ந சக்ய மீச்வரேணுபி நிரவத்யேந வர்த்திதும்* என்று. (இதன் பொருள்) ('அஸூயை யென்கிற) நான் உஷாராக இருந்தேனாகில் ஒன்றான ஸர்வேச்வரனுலும் குற்றங்களிலிருந்து தப்பிப் பிழைக்க முடியாது என்பதாம். இதற்கு மேல் "நிரவதி குணக்ராமே ராமே" என்று தொடங்கி மிக அருமையான ச்லோகமொன்று அந்த அஸூயா தேவியினுல் சொல்லப்பட்டுள்ளது: (அதன் கருத்து) குற்றம் என்பது லவலேசமும் காணமுடியாமலும், அனந்த கல்யாண குணஸமூஹமே வடிவெடுத்துமிருந்த ஸ்ரீ ராமபிரானிடத்திலும் நாளைக்கும் பலவகைக் குற்றங்களைக் கூசாமல் கூறி வருகின்ற இவ்வுலகத்தவர், மற்றையோரிடத்தில் எப்படி வெறுமனே யிருப்பார்கள்? குணக்கடலான எம்பெருமானே படுகிறபாடு அதுவானல் ஏதோ ஒன்றிரண்டு குணங்களையும் பல்லாயிரக்கணக்கான குற்றங்களையுமுடைய மற்றையோர் எப்பாடுபடவேண்டும்!—என்பதாம்.

ஸ்ரீ வசன பூஷணத்தில் அருளிச்செய்திருப்பவைகளும் ப்ரஸித்தம். மஹான்களின் இத்தகைய அமுதமொழிகள் நம்போல்வாரான புல்லியர்களின் அனுஷ்டானத்திற்கு வருவது மிகவும் அரிது. ச்ரமப்பட்டு அனுட்டானத்திற்குக் கொண்டுவந்துவிட்டால் ஆனந்தம் பரமானந்தமே. பிறர் செய்யும் தூஷணைகளினால் யார்க்கு என்ன நஷ்டமுண்டாகுமென்பதொன்றையே விவேகிகள் கவனிக்க வேண்டும். ஆமுஷ்மிகத்தில் எவ்வித நஷ்டத்தையும் இவர்களால் உண்டுபண்ணமுடியாது, ஐஹிகத்தில் ஏதேனும் சிறிது நஷ்டம் உண்டுபண்ண முடியும் என்றே வைத்துக் கொண்டாலும் அந்த நஷ்டத்தையே பரமலாபமாக நினைப்பது எவ்வளவோ நன்மை. இதைத்தான் ஸ்ரீ வசன பூஷண வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள் வெகு அழகாக நிரூபித்தருளுகிறார். அந்த ஆசாரியர்களை நாம் உள்ளபடி வழிபடுகின்றவர்களாக இருப்போமானால், அவர்களுடைய உபதேச மொழிகளை மெய்யன்புடன் நாம் அனுட்டானத்திற்கொண்டுவர அசக்தர்களாயினும் "பொய்யே கைம்மை சொல்லி" என்று ஆழ்வார் அருளிச் செய்த வழியில் கபடமாக வாகிலும் அநுசரிக்க ஆசைப்படுவோமானால் "மெய்யே பெற்றொழிந்தேன்" என்னும்படியே உண்மையான பலனைப் பெற்றே தீருவோம்.

## ஆறும் அதிகாரம்.

நாம் பெருமாள் ஸன்னிதிக்குச் சென்று பெருமாளைப் பரமபக்தியுடன் ஸேவிப்பது தியானிப்பது கைங்கரியங்கள் செய்வதாகிய இவையெல்லாம் எதனால் நடக்கிறதென்றால் அந்தப் பெருமாள் நம் கண்ணுக்குப் புலப்படாமலும் பேசாமலும் நாமிட்டது சட்டமாக இருப்பதனாலேயே. அவர் விபவாவதாரங்களில்போலே கண்காண நின்று காதாரப் பேசித் தம்முடைய ஜ்ஞானசக்திகளைக் காட்டிக் கொண்டிருந்தாராகில் அவரையும் நாம் தூஷிக்கவே தலைப்படுவோம். இதில் ஸந்தேஹமுண்டோ? இதைத்

தான் ஸ்ரீவசநபூஷணத்தில் "கண்காண நிற்கில் ஆணையிட்டு விலக்குவர்களென்று கண்ணுக்குத் தோற்ருதபடி நின்று" என்கிற அத்புதஸூக்தியினுல் அருளிச் செய்தார்.

சிலர் ராமாநுஜர் ராமாநுஜர் என்றும், சிலர் நம்பிள்ளை நம்பிள்ளையென்றும், சிலர் தேசிகன் தேசிகனென்றும், சிலர் மணவாளமாமுனிகள் மணவாளமாமுனிகளென்றும் இப்படி வாய் வெருவுவதெல்லாம் தெய்வாதீனமாய் அவ்வாசாரியர்கள் இந்நிலத்தைவிட்டுத் திருநாடு சென்று சேர்ந்தபடியாலே—என்பதையும் திண்ணமாக உணரவேண்டும். அவ்வாசாரியர்கள் ஜீவித்திருந்த காலத்தில் இந்த நாமும் பிறந்துதானிருந்தோம்; அப்போது அவர்களை தூஷித்துக்கொண்டும் பலவாறு பரிபவித்துக் கொண்டும் போதைப்போக்கினேம். அந்த நாமே இப்போது ஸ்வாமி ஸ்வாமியென்று குழைவதற்கு என்ன காரணமென்றுல்,–அவர்களுடைய உண்மையான அப்ராதிமயோக்யதைகளை யறிந்து நெஞ்சு கனிந்திருப்பார் யாரோ சில மஹான்கள் இந்தளத்திலே தாமரை பூத்தாற்போன்றவர்கள் இருக்கட்டும். பெரும்பான்மையோர்கள் அவர்களைப் போற்றுவதெல்லாம் "அவர்கள் என்றைக்கோ இருந்து மறைந்துபோனவர்கள்தானே; அவர்களைக்கொண்டாடுவதனுல் நமக்கென்ன நஷ்டம்" என்கிற இந்த ஒரே யெண்ணங்கொண்டுதான். யோக்யதையை யறிந்து உகப்பவர்களாயும் பொருமையற்றவர்களாயுமிருந்தால் அவர்களுடைய போதுபோக்கு எப்படியிருக்குமென்பதை நாம் சொல்ல வேணுமோ? "பிறர்மினுக்கம் பொருமையில்லாப் பெருமையும் பெற்ருேமே" என்றருளிச் செய்தவர் மணவாளமாமுனிகளொருவரே யல்லாது மற்ருெருவருமல்லரே.

முமுக்ஷுப்படியில் த்வயப்ரகரணத் தொடக்கத்தில் "புறம்புண்டானபற்றுக்களையடைய வாஸனையோடே விடுகையும்" என்று ஆரம்பித்து வைஷ்ணவாதிகாரிக்கு

அவச்யாபேக்ஷிதங்களான பத்து விஷயங்களைப் பிள்ளை லோகாசார்யர் அருளிச் செய்கிருர். அவற்றுள் "இப்படியிருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களேற்ற மறிந்து உகந்திருக்கையும்" என்பதுமொன்றுள்ளது. அங்கு வியாக்கியான மருளிச் செய்யாநின்ற மணவாளமாமுனிகள் —இது ஒன்று தவிர மற்றதெல்லாம் எளிதாக உண்டானாலுமுண்டாகக் கூடும்; இது ஒன்று இந்நிலத்தில் உண்டாவது அரிதே —என்று கண்ணீர்ப்பெருக்குடன் அருளிச் செய்திருக்கக் காண்கிறேம். மூலத்திற்கு வியாக்கியான மருள்வதற்கு மேற்பட ஒரு அக்ஷரமும் எழுதுகிற வழக்கமில்லாத மாமுனிகளன்றே பரவசமாக இங்கு இங்ஙனமெழுத நேர்ந்தது. பரமாசார்யர்கள் அவதரித்திருந்த நல்லடிக் காலமாகிய அக்காலத்திலே,இப்படி எழுதியருள நேர்ந்த தென்றல் இக்காலத்திற்குச் சொல்லவேணுமோ?

அஸூயையை வெல்வதென்பது ஆராலுமாகாது. "மற்றுமொருத்தருமிப் பிறவியென்னும் நோய்க்கு மருந்தறிவாருமில்லை" என்று பெரியாழ்வார் ஸாதித்தார்; அந்த மருந்து அறிவார் இருந்தாலும் இருக்கக்கூடும்; பொறாமையென்னும் நோய்க்கு மருந்தறிவாராருமில்லை யென்பதே ஸத்யம். யோக்யதையுண்டாவதென்பது தனிப்பட்ட ஒரு அத்ருஷ்ட விசேஷம். அஃதில்லாதவர்கள் அஃதுடையாரிடத்திலே பொறாமைப்பட்டுத்தீரவேண்டியது தலைவிதியாகிறது. ஒரு சிறு விஷயம் பாருங்கள்; ஒரு ஸன்னிதியில் வெள்ளிக்கிழமைதோறும் தாயார் புறப்பாடு நடக்கிறது. அப்போது தவருமல் சிறிய திருமடல் ஸேவையாகிறது. அந்த கோஷ்டியில் ஐம்பது அறுபது வருஷகால மாகச் சிலர் தவருது முன்னணியில் நின்று கம்பீரமாகக் காட்சி தருகிருர்கள். கோஷ்டி நிர்வாஹகபாவனையும் கொள்ளுகிருர்கள். "கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவி சொல்லும்" என்ற கணக்கிலே மதிளும் மரமுங்கூட அந்தத் திருமடலைச் சொல்லிவிடக் கூடும்; ஆனல் முன் சொன்ன கம்பீர ஸ்வாமிகளின் திருவாக்கிலோ ஒரு

அக்ஷரமும் வரமாட்டேனென்கிறது. குதிரை புரீஷவிஸர்ஜனம் செய்யும்போது அதன் ஆஸனம் படுகிறபாடு படுகிறதாயிற்று அவர்களின் சோதிவாய். அப்படிப்பட்டவர்கள் பல கலைகளிலும் ஒப்புமுயர்வுமற்ற யோக்யதைபெற்ற பாக்யசாலிகளைக் கண்டால் “என்ன நோன்பு நோற்றாள் கொலோ! இவரைப்பெற்ற வயிறுடையாள்” என்று கொண்டாட மனமில்லையானாலும் அரிய பெரிய யோக்யதைபெற்ற மஹான்களென்று மனத்திற்குள்ளேயாவது மகிழ்ந்திருக்க முடியாமற்போனாலும் அவர்களைப்பற்றி ஒன்றும் நினையாதே—உகப்பு வெறுப்பு இரண்டுமின்றிக்கே உதாஸீநபாவமாவது வஹிக்கலாமே; அந்தோ! தமக்குள்ள சக்தி முழுவதையும் அப்பெரியார்களுடைய நிந்தையாகிற அஸஹ்யாபசாரத்திலேயே செலுத்தி எற்றைக்கு மேமேழ் பிறவிக்கும் இப்படியே நிரக்ஷரகுக்ஷிகளாய் ஜனிக்கவே க்ருஷிபண்ணிப்போருகிறார்களே! என்று ப்ராதஸ் ஸ்மரணீய திவ்ய கீர்த்தி மூர்த்தியான அஸ்மதுபாத்யாய சரண ஸ்ரீ மாம்பள்ளம் ஸ்வாமி அடிக்கடி ஸாதிக்கக் கேட்டதுண்டு. ⚜ ஸ்வபாவோ துரதிக்ரம: ⚜ என்று கொண்டு இப்படிப்பட்ட அஸஹ்யாபசாரிகளை நெஞ்சாலும் இட்டெண்ணாமலிருக்க வேண்டுமேதவிர நொந்து பயனில்லை யென்பர் சில மஹான்கள்

“தண்டேன் நுகரா மண்டூகம் தண்டாமரையினுடன் பிறந்தே, வண்டே கானத்திடைப்பிறந்தும் வந்தே கமல மது வுண்ணும், அண்டே பழகியிருந்தாலும் அறியார் பொல்லோர் நல்லோரைக், கண்டேகளிப்பருறவாடிக் கற்றோர் நல்லோர் பெற்றக்கால்” என்கிற செய்யுளொன்றையாவது சிந்தனை செய்து போதுபோக்கலாம் அவர்கள்; எவர்கள்? நல்ல வழியில் போதுபோக்க யோக்யதை ஸம்பாதிக்க பாக்கியமற்றவர்கள்,

## உபஸம்ஹாரம்

நமது போது நல்ல போதாகக் கழியவேணுமென்கிற நினைவுடையவர்கள் கீழ்க்கண்ட பத்து விஷயங்களை அடிக்கடி சிந்திக்கவேணும்; கூடியவரையில் அனுஷ்டானத்தில் கொண்டுவர முயலவேணும்.

1. அஹங்காரம் எல்லாப்படியாலும் ஸ்வரூபத்தைக் கெடுக்கவல்லதாகையாலே அது கழியும் வழி யென்ன வென்று சிந்திக்க வேணும்.

2. அந்த அஹங்காரத்தை வளரச்செய்கிற நியாரோடு ஸஹவாஸத்தை யொழிக்கவேணும்.

3. அஹங்காரம் முதலிய பலகுற்றங்களை உபதேசம் முதலியவற்றால் போக்கவல்லவர்களான மஹான்களை தேஹபந்துக்களாகவும் ஆத்மபந்துக்களாகவும் ஸகலவித பந்துக்களாகவும் நினைத்து அவர்களையே உசாத்துணையாகக் கொள்ளவேணும்.

4. ஞானபக்தி விரக்திகள் மலிந்த மஹான்களைக் கண்டால் நிலாத் தென்றல் சந்தனம் புஷ்பம் முதலியன கண்டாற்போலே நெஞ்சு குளிர்ந்திருக்கவேணும்.

5. அஹங்காரத்தினுடையவும் அர்த்தகாமங்களினுடையவும் கெடுதல்களை அநவரதம் சிந்திக்கவேணும். சமதமாதி குணங்கள் வளரும்வழி பார்க்கவேணும்.

6. பகவத் குணாநுபவத்திலும் பூர்வாசார்ய ப்ரபாவ அநுஸந்தானத்திலுமே அதிக காலம் கழியும்படி நோக்கவேணும்.

7. விலக்ஷணர்களுடைய ஞானமும் அனுட்டானமும் நமக்கு உண்டாகவேணுமென்று ஆசைப்படவேணும்.

8. ஜ்ஞாநாநுஷ்டானங்களை வளர்க்கவல்ல ஸத்துக்களை ஒரு நொடிப்பொழுதும் விட்டுப்பிரியாமலும் ஸ்வரூபத்தைக் கெடுக்கவல்ல நீசர்களைக் கண்ணெடுத்துப்பாராமலும் இருக்குமிருப்பை அருளவேணுமென்று அநவரதம் பகவானைப் பிரார்த்திக்க வேணும்.

9. பிறரிடத்தில் மலைமலையான தோஷங்களிருந்தாலும் அவற்றில் கண் செலுத்தாமலும் குணலேசங்களையே மலையாகக்கொண்டு உகந்திருப்பதும், தோஷங்களே வடிவெடுத்திருக்கின்ற நமக்கு ஒரு குணமுமில்லையே யென்று நொந்திருப்பதும் நித்யமாகச் செல்லவேணும்.

10. பிறரிடத்திலே தோஷங்களைப் பேசுவதானது நிர்மலமான ஆகாசத்திலே சேற்றைவாரி யெறியுமவன் செய்கைபோலே யாகுமத்தனையென்று திண்ணமாகக் கொண்டு, அஸூயையையும் அஹங்காரத்தையும் அறவே யொழித்தாலன்றி நாம் உய்ய விரகில்லையென்று துணிந்திருக்கவேணும். ஆக இவ்விஷயங்களை நிச்சலும் நெஞ்சிற் கொண்டிருப்பார்க்கு இங்குமங்குமெங்குமின்பமாகுமே.

இவ்வின்பம் பெற விருப்பமுடையார்க்கு உணவாகும்படி ஆழ்வாராசார்ய திவ்யஸூக்தி வியாக்கியானங்கள் முதலிய பல நூல்களை நாம் ஏற்கெனவே உதவியிருந்தாலும் இப்போது மஹாநிதியான இரண்டு நூல்களை உதவுகின்றோம்;

**(1) திவ்யப்ரபந்தஸாரத்திரட்டு.** நாலாயிர திவ்வியப் பிரபந்தங்களிலிருந்து 300 பாசுரங்கள்வரையில் ஸாரமாக எடுத்து அவற்றை உரையோடு கூடவும் வெளியிட்டிருக்கிறது.

**(2) பன்னிருதிங்களநுபவம்.** ஒவ்வொரு மாதத்திலும் சில ஆழ்வார்களும் சில ஆசாரியர்களும் அவதரித்திருக்கிறார்களல்லவா? அவரவர்களைப் பற்றின விசேஷங்களை

மாதவாரியாக அநுஸந்திப்பதற்குப் பாங்காக இப்புத்தகம் வெகு விரிவாக அமைக்கப்பட்டுள்ளது. ஐப்பசி மாதத்தி லிருந்து புரட்டாசி மாதம்வரை வரிசையாக அநுபவிக்க வேண்டிய விஷயங்கள் இதில் தேனும் பாலுமமுதுமாகத் தொகுக்கப்பட்டிருக்கின்றன. ஐப்பசியில் பொய்கை பூதம் பேயாழ்வார்களெனும் முதலாழ்வார்கள் பிள்ளை லோகா சார்யர் மணவாளமாமுனிகள். (2) கார்த்திகையில்-திரு மங்கையாழ்வார் திருப்பாணாழ்வார் அருளாளப் பெருமா ளெம்பெருமானார் நம்பிள்ளை. (3) மார்கழியில்-தொண்ட ரடிப்பொடி யாழ்வார், திருவத்யயநோத்ஸவப் பெருமை. (4) தையில்-திருமழிசையாழ்வார், எம்பார், கூரத்தாழ்வான். (5) மாசியில்-குலசேகராழ்வார் திருக்கச்சிநம்பிகள். (6) பங்குனியில்-பெரியபிராட்டியார்; நஞ்சீயர். (7) சித்திரை யில்—மதுரகவியாழ்வார், எம்பெருமானார் முதலியாண்டான் அனந்தாழ்வான். (8) வைகாசியில்—நம்மாழ்வார் பட்டர் (9) ஆனியில்-பெரியாழ்வார், ஸ்ரீமந்நாதமுனிகள், வடக்குத் திருவீதிப்பிள்ளை. (10) ஆடியில்-ஆண்டாள், ஆளவந்தார். (11) ஆவணியில்-கீதாசார்யன், பெரியவாச்சான்பிள்ளை. (12) புரட்டாசியில்-வேதாந்ததேசிகன்........ஆக இவர்களைப் பற்றி விசேஷமாகச் சிந்தனை செய்ய வேண்டியவற்றை இனிமைமிகத் தொகுத்திருக்கப் பெற்ற இந்நூல் "தொண்டர்க்கமுதுண்ண" என்னும் வகையிலே அமைந் துளதாதலால் இதைக்கொண்டு போது போக்குவார்க்கு நற்போதுபோக்கு வேறு வேண்டா.

சேமம் செங்கோனருளே.

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம் **அண்ணங்கராசாரியர்**

எழுதிய நற்போதுபோக்கு

**முற்றிற்று**

ஸ்ரீ

# அடியேனுடைய போதுபோக்கைப்பற்றி முடிவில் ஒரு விண்ணப்பம்.

திருமாலையில் * வேதநூற் பிராயம் நூறு * என்கிற பாசுரத்தில் அருளிச்செய்யப்பட்ட விஷயம் இவ்விருள் தருமாஞாலத்திற் பிறந்து வருந்தும் அனைவர்க்கும் ஒக்கு மாதலால் ஸாம்ஸாரிகரீதியில் கழியும் காலம்போக மிகுந்த காலத்தை ஒரு நொடிப்பொழுதும் பழுதாக்காமே "தெரித்தெழுதி வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது" என்று திருமழிசைப் பிரான் திருவாய் மலர்ந்தருளிய கட்டளையிலேயே போக்கி வருகின்றேன். அடியேன் இளமையில் * யந் முஹூர்த்தம் க்ஷணம்வாபி வாஸுதேவோ நசிந்த்யதே, ஸா ஹாநிஸ் தந்மஹச்சித்ரம் ஸா ப்ராந்திஸ் ஸா ச விக்ரியா * என்கிற ச்லோகத்தையும் * ஏகஸ்மிந்நப்யதிக்ராந்தே முஹூர்த்தே த்யாநவர்ஜிதே, தஸ்யுபிர் முஷிதேநேவ யுக்தமாக்ரந்திதும் ந்ருணாம் * என்கிற ச்லோகத்தையும் பல பெரியார்களிடம் பல கால் கேட்டுத் தரித்து அடிக்கடி அவற்றையே சிந்திப்பதும் பிறர்க்குரைப்பதுமான இயல்புடையேனாதலால் இருபத்திநான்கு மணிகளில் ஏறக்குறையப் பதினெட்டு மணிகாலம் அடியேனுக்கு நற்போதாகவே கழிவதாக ஆத்மஸாக்ஷிகமான ஆனந்த விஜ்ஞாபனம்.

ஸம்ஸ்க்ருதம் தமிழ் தெலுங்கு ஹிந்தி ஆகிய நான்கு பாஷைகளிலும் அடியேன் பூர்வாசார்ய ஸ்ரீ ஸூக்திகளுக்கு வியாக்கியானங்களாகவும், உபந்யாஸங்களாகவும், ஸமய விசேஷங்களில் நேரும் வாதங்களுக்குப் பிரதிவாதங்களாகவும், மாதப் பத்திரிகைகளாகவும் வெளியிட்டிருக்கின்ற புத்தகங்கள் கடல்சூழ்ந்த மண்ணுலகம் முழுவதும் பரவியிருக்கின்றமையால் அடியேனுடைய போதுபோக்கைப் பற்றி விசேஷித்துத் தெரிவிக்கவேண்டிய அவசியமில்லை யெனினும் அடியேனுடைய போதுபோக்கு வகைகளைச் சிந்திக்கும்போது அடியேனுள்ளத்திலுண்டாகும் ஆனந்தம்

—பரமானந்தம்—ப்ரஹ்மானந்தம் அபரிமிதமானது. ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் போதுபோக்காக அமைந்த ஸகல க்ரந்தங்களையும் [உபய ஸம்ப்ரதாய க்ரந்தங்களையும்] பரிஷ்கரித்து வெளியிடுதல், அவற்றுக்கு உலகம் மெச்சும் உரைகளை யியற்றி வெளியிடுதல் ஆகிய முக்கியமான இரண்டு பணிகளில் எம்பெருமான் அடியேனுக்கு ஊக்க மளித்து வேண்டிய ஸௌகரியங்களையும் மநோரதங் களுக்கு மேற்படவும் விளைவித்தருளி அநுக்ரஹித்து வருவதானது, "பெருங்கேழலார் தம் பெருங்கண்மலர்ப் புண்டரீகம் நம்மேலொருங்கே பிறழவைத்தா ரிவ்வகாலம், ஒருவர் நம்போல் வருங்கேழ்பவருளரோ?" என்று நம்மாழ்வாரைப்போல அடியேனையும் பேசுவிக்கின்ற தெனறால், இதில் யார்தாம் பொறாமைப்பட்டுப் பயனென் கொல்? "ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளுக்கோ ஆசார்ய ஸ்ரீஸூக்திகளுக்கோ தினவடங்கப் பொருள் தெரிந்து கொள்ள வேணுமானால் உனது உரைகளையும் வியாக் கியானங்களையும் கொண்டே தெரிந்து கொள்கிறோம்" என்று தேசமெங்கும் விளங்கும் மஹான்கள் அன்று தொடங்கி இன்றளவும் கண்ணீர் மல்கநின்று கூறு வதைக்கேட்டு "காக்கை வாயிலும் கட்டுரை கொள்வர்" என்றும் "பல்லியின் சொல்லுஞ் சொல்லாக் கொள் வதோவுண்டு பண்டு பண்டே" என்றும் அநுஸந்தித்து வருகின்றேன். பிறர்போல் அடியேனும், ஸந்தேஹந் தோன்றுங் காலங்களில் அடியேனெழுதிய வியாக்கி யானங்களையே எடுத்துக்காணும்போது "இவைகண்டவ சோதை தொல்லை யின்பத்து இறுதிகண்டாளே" என்று குலசேகராழ்வார் பணிக்கும்படியான நிலைமையை யெய்து கின்றேனென்பதை வெளியிட்டுக் கொள்ளாதிருக்க முடிய வில்லையே.

"இவை எத்தனையோ குற்றங்கள் மலிந்தவுரைகள்" என்று சொல்லுவாரும் எழுதுவாருமுளரெனினும் 'நடந்து செல்பவன் தடுக்கி விழுந்தாலென்ன?' 'நடவாமல்

படுத்துறங்குமவன் தடுக்கி விழுந்திலனென்பது பெருமையோ?' என்னும் முதுமொழிகளை நினைந்து மனந்தேறுகின்றேன். ஏறக்குறைய இரண்டு லக்ஷம் பக்கங்களுக்கு மேற்பட எழுதி வெளியிட்டிருக்கின்றேனென்பது ஸகல ஜகத்ஸாக்ஷிகம். இவற்றில் ஒரு லக்ஷம் பக்கங்கள் குற்றமே வடிவெடுத்தவை யென்று தேறி விட்டாலும் குறை யொன்று மில்லையே.

அடியேனிடத்து மெய்யன்பு பூண்ட மஹான்கள் சிலர் "வியாக்கியான நூல்களையும் உபந்யாஸ நூல்களையும் மாத்திரம் எழுதுவதோடு நின்று வாதக்ரந்தங்களை யெழுதாது நிறுத்திக்கொள்ளலாமே" என்று இதமாக இயம்புவதுமுண்டு. அந்த மஹான்களே சில ஸமயங்களில் துர்வாதங்களும் துராக்ஷேபங்களும் மலிந்த பிறருடைய நூல்களைக் கண்டு வருந்தி அவற்றைத் தாங்களே யெனக்கனுப்பி 'உண்மைப்பொருளை உலகுக்கு உணர்த்தி உதவி புரியவேணும்' என்று நிர்ப்பந்தமாகவே நியமிப்பதுமுண்டு. ஆகவே அடியேன்பால் வாதக்ரந்தங்கள் தோன்றியதும் லோக க்ஷேமத்திற்கே யாகுமென்பது மெய்யறிவாளரின் மேலான முடிபு. அடியேனுக வொரு ஆக்ஷேபத்தைக் கிளப்பிக் கண்டனஞ் செய்வதென்பது இதுகாறுமில்லை. நல்லாசிரியர்களின் திருவடிவாரத்தில் துவண்டுகேட்டுத் தரித்து வைத்துக்கொண்டிருக்கும் நற்பொருள்களுக்கு விபரீதமானவற்றைப் பிறர் வெளியிடக்கண்டால் பொறுத்திருக்கும் மனப்பான்மையை அடியேனுக்குத் தந்திலன் தேவபிரான். தீய பொருள்களைக் களைந்து நல்ல பொருள்களை நாட்டி வைத்தாலொழியக் கண்ணுறங்காது. சில வாண்டுகளுக்கு முன்பு வேத லக்ஷணக்ரந்த விசாரபரமாகப் பல வாத க்ரந்தங்களை யெழுத நேர்ந்தது; அதனால் வருந்தினவர்களும் வைதவர்களும் பலருண்டெனினும், கீர்த்தி மூர்த்திகளான கபிஸ்தலம் தேசிகாசார்யஸ்வாமி, மைஸூர் ஸம்ஸ்தான வித்வான் லக்ஷ்மீபுரம் ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி' சேனங்

குளம் கனபாடிகள் முதலான பல நிஷ்பக்ஷபாத வித்வன் மணிகள் அடியேனுடைய அந்த வாத க்ரந்தங்களெல்லாம் அவச்யமானவையே, அநவத்யமானவையே என்று சிலா சாஸனம் செய்து வைத்தார்களென்பதை உலகம் மறந்திராது. இவ்விதமாக நம்முடைய வாதக்ரந்தங்களெல்லாம் அந்தந்த ஸமயங்களில் ப்ராமாணிகர்களும் மத்யஸ்தர்களுமான மஹான்களால் பெரும்பாலும் "அவசா: ப்ரதியேதிரே" என்கிற முறையில் மெச்சப் பட்டவையே யாதலால் அடியேனது வாதக்ரந்தங்களும் லோக க்ஷேமத்திற்காகவே தோன்றியவை யென்பது புநருக்தம்.

இந்த ப்ரஸ்தாவத்தில் ப்ரக்ருதம் அவசியம் விஜ்ஞாபிக்கவேண்டியதொன்றுண்டு. திருப்பதியிலுள்ள வொரு பண்டிதர்க்கும் அடியேனுக்கும் மூன்று நான்கு ஆண்டுகளாக ஓயாத வாதப்போர் க்ரந்த மூலமாகவும் பத்திரிகா மூலமாகவும் நடந்து வருகின்றதென்பதை ஸமீபகாலத்தில் [நேற்று தை மாதத்தில்] அடியேன் வெளியிட்ட **அத்புத சக்தி** யென்னும் க்ரந்தத்திலும் அதன் முடிவிலுள்ள பகுதியினும் உலகமுணரும். ஏறக்குறைய ஐம்பது விஷயங்களில் விவாதங்கள் நேர்ந்திருக்கின்றன. அவற்றுள் ப்ராஸங்கிகமானவை சில, ப்ரதானமானவை சில. முக்கியமான விஷயங்களில் அடியேனுடைய விமர்சங்களே மிகப் பொருத்தமானவை யென்று பல பண்டிதர்கள் அவ்வப்போது மதிப்புரைகளை வெளியிட்டிருப்பது யாவருமறிந்தது. ஸ்ரீஉவே. நாவல் பாக்கம் நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி, இளங்காடு ரங்காசாரியர் ஸ்வாமி முதலான நிஷ்பக்ஷபாத ப்ராமாணிக பண்டிதோத்தமர்கள் அபிப்ராயம் தெரிவித்த பின்புங்கூட, பிறர் அவற்றில் கண்செலுத்தாமலோ, 'அவர்களின் அபிப்ராயம் எப்படி யிருந்தால் நமக்கென்ன?' என்று கொண்டோ அர்த்தமில்லாத வார்த்தைகளையே மீண்டு மீண்டும் நிரப்பிச் சில ஏடுகளை வெளி

யிடுகிறார்கள். * லகுஸ் ஸமதுலாரூடோ ஹி அதர்குருதே குரும், தத்ர மத்யஸ்த ஜிஹ்வைவ தாரதம்ய பரீக்ஷிணீ * என்கிற அருமையான சுலோகத்தையும் அதன் சீரிய பொருளையும் அறிஞர் அறிவர். நிஷ்பக்ஷபாதர்களும் ஸாராஸாரவிவேக நிபுணர்களும் விவாதத்திற்கு முடிவு கட்ட வல்லவர்களுமான மஹான்களின் விலையுயர்ந்த வாக்கன்றோ விவாதிகளுக்குத் தெளிவைப் பிறப்பிக்க வல்லது. * ஆபரிதோஷாத் விதுஷாம் * என்ற மஹாகவி பாஷிதத்தின்படியும் வித்வான்களின் பரிதோஷமேயன்றோ எதிர்பார்க்கத்தக்கது. அது ஒருதலையில் வெளிவந்த பின்பும் எதிர்த்தலை ஏதேனும் சப்தம் செய்து கொண்டே யிருந்தால் இதை மதிப்பாருண்டோ?

ஸந்நிஹிதங்களான சில விஷயங்களைப் பற்றி மாத்திரம் இங்கு ப்ரஸ்தாவிக்கிறேன். ந்ருஸிம்ஹாவதார ஹேது நிர்ணயம், விபவாவதார சோகதத்வம், அத்புதசக்தி முதலான நமது நூல்களின் விஷயங்கள் வடமொழியிலும் தென் மொழியிலும் விரிவாக வெளிவந்தவை. இந்நூல்களின் ப்ராமாணிகத்வத்தைப் பல பண்டிதர்கள் வெளி யிட்டுள்ளார்கள். மற்றையோரெல்லாரும் நிற்க ஸ்ரீமத் அஹோபில மடத்து ந்ருஸிம்ஹப்ரியா பத்ரிகை யாசிரியரும் உலகம் நிறைந்த புகழாளருமான (மாம் பலம்) ஸ்ரீ வாஸுதேவாசார்ய ஸ்வாமியருளிய பாரி தோஷிகவாய்மொழிகளானவை தென்னிந்தியாவிலும் வட இந்தியாவிலுமுள்ள ஸ்ரீ வைஷ்ணவர்களனைவருமறிந்தவை. அப்பெரியார் அடியேனுக்கு ஸ்ரீமுகமாக எழுதியனுப்பி அடியேன் வெளியிட்டுக்கொண்டவையிருக்கட்டும்; நேற்று அடியேன் வெளியிட்ட அத்புதசக்தி க்ரந்தத்தைக்கடாக்ஷித் தருளின அந்த வாஸுதேவாசார்ய ஸ்வாமி, நிகழும் மாசி மாதம் வெளிவந்த ந்ருஸிம்ஹப்ரியாவில் (7—2ல்) அனை வருமறியத் தமிழிலேயே எழுதி வெளியிட்டிருக்கும் வியாஸம் இது காணீர்; மதிப்புரையென்ற மகுடத்தின்கீழ்—

"அத்புத சக்தி:— இதனை இயற்றியவர் ப்ரதிவாதி பயங்கரம் வித்வான் ஸ்ரீ. உப. அண்ணங்கராசார்ய ஸ்வாமி. விஷயம்:— எம்பெருமான் எங்கும் நிறைந்துள்ள பரம் ஜ்யோதிஸ் என்று வேதங்கள் கூறுகின்றன. அதாவது: மஹத்தான பதார்த்தங்களின் வெளியிலும் அணுவான பதார்த்தங்களினுள்ளும் அவன நிறைந்துளன என்று சொல்லப்பட்டதாயிற்று. இது எப்படி ஸாத்யம்? அணுவான பதார்த்தங்களுக்கு உட்புறம் என்று வகுத்துக் காட்டக்கூடிய இடம் இல்லையே. அங்கு அந்தர் வ்யாப்தி எப்படி? அம்மாதிரியே மஹத்தான பதார்த்தங்களில் பஹிர்வ்யாப்தி என்று சொல்வது ஸாத்தியமில்லையன்றோ! ஆகையால் வேதாந்திகளின் கொள்கையை ஒப்புக்கொள்ள இயலாது. இவ்வாறு ஆக்ஷேபமொன்று உண்டு. நிற்க: பகவானுடைய ஸ்வரூபம் முழுவதும் ஒரு பதார்த்தத்தில் வ்யாபித்திருக்கிறதென்று சொல்லி விட்டால், மற்றும் உலகிலுள்ள வஸ்துக்களிலும் இது இருக்கிறதென்று எப்படிச் சொல்லக் கூடும்? இது மற்றுமொரு ஆக்ஷேபம். இம்மாதிரியான ஆக்ஷேபங்களுக்கு 'எம்பெருமானுக்கு அத்புதமான சக்தி உண்டாகையால் இவை பரஸ்பர விருத்தமாக இருந்தாலும், அவன் விஷயத்தில் அது இயலும்' என்று ஸமாதாநத்தை சாஸ்த்ரங்களே கூறுகின்றன. இந்த அத்புத சக்தி என்பதன் பொருள் என்னவென்னும் விஷயத்தில் வைஷ்ணவர்களுக்குள் விவாதமுண்டு. அப்படி விவாதிக்கும் இரு கக்ஷிக்காரர்களுள் எவர்களுடைய கக்ஷி இருகக்ஷிக்காரர்களுக்கும் பொதுவாக இருக்கும் ஆசார்யர்களுக்கு அபிமதம் என்பதை இந்நூல் விசாரிக்கின்றது. இதை மிக்க ரஸத்துடன் ஸ்ரீ அண்ணங்கராசார்ய ஸ்வாமி விசாரித்திருக்கிறார். ரஸிகர்கள் இதைப் படித்து ஆநந்தப்படக்கூடும். இதன் விலை அணு எட்டு. இதனை 'ஸ்ரீ அண்ணங்கராசார்ய ஸ்வாமி சின்ன காஞ்சீபுரம்' என்னும் விலாஸத்துக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம். ஸ்ரீ. ந்ரு. ப்ரியா ஸம்பாதகர்." என்று வெளிவந்துள்ளது. இந்த மதிப்புரையில் "இம்மாதிரி

யான ஆக்ஷேபங்களுக்கு எம்பெருமானுக்கு அத்புதமான சக்தியுண்டாகையால் இவை பரஸ்பர விருத்தமாக இருந்தாலும் அவன் விஷயத்தில் அது இயலுமென்று ஸமாதானத்தை சாஸ்த்ரங்களே கூறுகின்றன" என்றுள்ள வாக்கியமானது மிகவும் ஸாரமானது. அடியேனுடைய அபிப்ராயமே தமது திருவுள்ளமாகவும் இங்கும் பிறருடைய வாதங்கள் வம்பேயாகவும் ஸ்பஷ்டமாக வெளியிடப்பட்டதன்றோ. இவற்றால் அடியேனுடைய வாதக்ரந்தங்களெல்லாம் மத்யஸ்தர்கள் மெச்சும்படியானவகையிலேயே அமைந்திருக்கின்றனவென்பது அறியலாகும். இந்த மதிப்புரையும் இதுபோன்ற பல மதிப்புரைகளும் நாம் விரும்பி வெளிவந்தவையல்ல. ப்ராமாணிகப்பொருளை மறுத்தும் மறைத்தும் அப்ராமாணிகப் பொருள்களைச் சிலர் பரவவிடுகிறார்களேயென்கிற நிர்வேதம் தாங்க முடியாமல் அவரவர்தாமாகவே கனிந்த நெஞ்சினராய் வெளியிடுகிறார்களென்பது சொல்தொடையில்தானே எளிதிற் புலனாகும்.

இவ்விஷயம் இங்கு அவசியம் எடுத்துக்காட்டவேண்டியதுமன்று; நாம் பெருமையாக எடுத்துக்காட்டிக் கொண்டதுமன்று. வாதக்ரந்தங்களையும் நாம் வரைந்து போதுபோக்குவதானது ஸ்ரீ தேசிகாதிகளின் பரமதபங்காதி க்ரந்த ரத்னங்கள்போலே பாரோர்கள்தாமுய்யப் பாங்கானவையே யென்று முதலித்தோமத்தனை. "ரஸபரேண நீதம் வய: ப்ரபுல்லபலிதம் சிர:" என்று ஸ்ரீ தேசிகனருளியகணக்கிலே கழிந்தவை கழிக. இனி வாதக்ரந்த ரசனைகளில் விருப்பத்தை அறவேயொழித்து அத்யாவச்யக வ்யாக்யான லேகனங்கள் பல சேஷித்திருப்பதால் அவற்றிலேயே அடியேன் அநவரதம் போதைப் போக்குமாறு பேரருளாளன் பேரருள்புரியவேணுமென்று பிரார்த்தித்து நிற்கின்றேன்.

— ப்ர. அ.

Printed by Rajaji Press Ltd., Karaikudi Q.H.R. No. 20/9-3-48/500 Copies for Sri. P. B. Annangaracharyar of Conjeevaram Q.H.C.T. 26

ஸ்ரீரஸ்து

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாய

# புத்தக விளம்பரம்.

ஆளவந்தார், உடையவர், கூரத்தாழ்வான், பட்டர், நம்பிள்ளை பிள்ளை, லோகாசார்யர், வேதாந்த தேசிகர், மணவாளமாமுனிகள் முதலான பூருவாசாரியர்கள் அருளிச்செய்த க்ரந்தங்கள் யாவும் கிடைக்கும்.

ஷை கிரந்தங்களுக்கு வியாக்கியானமாகவும், உபந்யாஸ ரூபங்களாகவும், வாத க்ரந்தங்களாகவும், சரித்திர நூல்களாகவும், ஸ்ரீ காஞ்சீ. **P. B.** அண்ணங்கராசாரியர் ஸ்வாமி இயற்றிய பலவகை நூல்களும் கிடைக்கும்.

# ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய

# புத்தக விளம்பரம்.

## P B. அண்ணங்கராசாரியரின் வெளியீடுகள்.

| | | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|
| 1. | **பகவத்ராமாநுஜ க்ரந்தமாலா.** (தெலுங்கு லிபி) உடையவர் அருளிச்செய்த ஸ்ரீ பாஷ்யம் முதலிய ஸகல க்ரந்தங்களும் ஒரே ஸம்புடமாகவுள்ளது. ... | 7 | 0 | 0 |
| 2. | **ஸ்ரீமத் வேதாந்த தேசிக க்ரந்தமாலா.** (தேவநாகர லிபி) ஸ்ரீ தேசிகன் அருளிச் செய்த ஸம்ஸ்க்ருத க்ரந்தங்கள் யாவும் ஐந்துவால்யமாக அச்சிட்டிருப்பவை.... | 36 | 0 | 0 |
| | ஷை சிறந்த பயிண்டுடன் ... | 48 | 0 | 0 |
| 3. | **ஸ்ரீமத்வரவர முநீந்த்ர க்ரந்தமாலா.** (தெலுங்கு லிபி) மணவாளமாமுனிகள் அருளிச் செய்த ஸ்ரீ வசந பூஷண தத்வ த்ரய—முமுக்ஷுப்படி—ஆசார்ய ஹ்ருதய வியாக்கியானங்கள் நான்கும் ஒன்று சேர்ந்த ஸம்புடம். ... | 7 | 0 | 0 |
| 4. | முதலாயிம்—விரிவுரை. (ப்ர-அ.) ... | 10 | 0 | 0 |
| 5. | பெரிய திருமொழி 9—பத்துக்கள் ஷை ... | 9 | 0 | 0 |
| 6. | திருவாய்மொழி 700—பாசுரம் ஷை ... | 7 | 0 | 0 |
| 7. | இயற்பா ஆயிரத்தில் சிலபகுதிகள் ... | 5 | 0 | 0 |
| 8. | வரதராஜ ஸ்தவ வியாக்யானம் (தமிழ்)... | 1 | 0 | 0 |
| 9. | ஸுதர்சந சதக வியாக்யானம் „ ... | 1 | 0 | 0 |
| 10. | தேசிக ஸ்தோத்ரங்களில் சிலவற்றுக்கு வியாக்கியானம் „ ... | 1 | 8 | 0 |
| 11. | ஸ்ரீ வசநபூஷணஸாரமும் முமுக்ஷுப்படி ஸாரமும் ... | 3 | 0 | 0 |
| 12. | வேதலக்ஷண விசாரத் தொகுதி ... | 2 | 8 | 0 |
| 13. | அதிமாநுஷஸ்தவ வியாக்யானம் ... | 0 | 12 | 0 |
| 14. | பகவச்சாஸ்த்ர தத்துவம் ... | 0 | 6 | 0 |
| 15. | ஆழ்வார்கள் வைபவம் ... | 0 | 12 | 0 |

| | | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|
| 16. | மணவாள மாமுனிகள் வைபவம் ... | 0 | 8 | 0 |
| 17. | ஷை ஸ்ரீ வைஷ்ணவ ஸௌபாக்யம்... | 0 | 12 | 0 |
| 18. | ஸ்ரீராமாநுஜர் வைபவம் ... | 0 | 8 | 0 |
| 19. | ஸ்ரீரங்க ராஜஸ்தவம் தமிழுரை (பூர்வசதகம்) ... | 1 | 8 | 0 |
| 20. | தென்னாசார்ய ஸம்பிரதாயம் ... | 1 | 0 | 0 |
| 21. | ஸதாசார்ய ஸூக்திரக்ஷா ... | 0 | 8 | 0 |
| 22. | அத்யாபகஹஸ்த பூஷணம் (நாலாயிரம் முன்னடி பின்னடி) ... | 1 | 0 | 0 |
| 23. | முமுக்ஷுப்படி தத்வத்ரயம், ஸ்ரீவசன பூஷணம் மூலம் ... | 0 | 12 | 0 |
| 24. | பூர்வாசார்ய ப்ரபாவம்(குருபரம்பரை)... | 1 | 4 | 0 |
| 25. | விசேஷார்த்த ரத்னநிதி ... | 0 | 8 | 0 |
| 26. | நித்யாநுஸந்தான விரிவுரை ... | 2 | 8 | 0 |
| 27. | உபதேச ரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, யதிராஜவிம்சதி, வரவரமுநி தண்டகம்—இவை உரையுடன் ... | 1 | 8 | 0 |
| 28. | முகுந்தமாலை, ஆளவந்தார் ஸ்தோத்ரம் சதுச்லோகி, ஸ்ரீஸ்தவம், தேவராஜாஷ்டகம், தேவராஜமங்களம், யதிராஜவிம்சதி இவற்றுக்கு விரிவுரை ... | 2 | 10 | 0 |
| 29. | ஆசார்ய ஹ்ருதய ஸாரம் மூலத்துடன் தாற்பரியச் சுருக்கம் ... | 1 | 10 | 0 |
| 30. | துவரைப்பிரான் திருவருள் = வாத்ஸல்யார்த்த விளக்கம், வம்பவிழ்கோதை நிரூபணம், வேதத்தில் சில ஆராய்ச்சிகள்—இவை யடங்கியது ... | 0 | 8 | 0 |
| 31. | பரமார்த்தரக்ஷா (பல ஆராய்ச்சிகள்)... | 1 | 8 | 0 |
| 32. | தீண்டாமை தொலையாமை ... | 0 | 8 | 0 |
| 33. | அஷ்டச்லோகியுரை = திருமந்திரம் த்வயம் சரமச்லோகம் இவற்றின் ஸாரப் பொருளடக்கம் ... | 0 | 8 | 0 |

| | | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|
| 34. | தத்வஹிதோபதேசம் ... | 0 | 8 | 0 |
| 35. | ஆலயப்ரவேசத்தில் வைதிகர்களின் கடமை (அம்ருதலஹரி 103) ... | 0 | 8 | 0 |
| 36. | ஸ்ரீராமாயண ஸாரம் ... | 0 | 10 | 0 |
| 37. | பகவத்கீதை முதலத்யாயம்—விரிவுரை... | 0 | 8 | 0 |
| 38. | ஆர்த்திப் பிரபந்தவுரை ... | 0 | 8 | 0 |
| 39. | சிரோமணி சேகரம்— சிரோமணி—சிரோபூஷா ... | 0 | 12 | 0 |
| 40. | மாமுனிவனருள் விளக்கு ... | 0 | 4 | 0 |
| 41. | ஸத்ஸம்ப்ரதாய பரித்ராணம் வம்பவிழ்கோதை தத்துவம் ... | 0 | 8 | 0 |
| 42. | தேசிகஸ்தோத்ரங்கள் (தெலுங்குலிபி)... | 2 | 0 | 0 |
| 43. | பக்தாம்ருதம் (40 உபந்யாஸங்கள்) ... | 1 | 8 | 0 |
| 44. | திவ்யப்ரபந்தஸாரத் திரட்டு ... | 0 | 10 | 0 |
| 45 | நரஸிம்ஹாவதாரஹேது நிர்ணயம் விபவாவதார சோகதத்வம் ... | 0 | 8 | 0 |
| 46. | வைதிக மநோஹரா மாதந்தோறும் வெளிவரும் ஸம்ஸ்க்ருத பத்திரிகை தேவ நாகரி ௵ சந்தா ... | 3 | 0 | 0 |
| 47. | அம்ருதலஹரீ தமிழ் (மாதப்பத்திரிகை) ௵ சந்தா ... | 3 | 8 | 0 |
| 48. | ராமாநுஜ பத்ரிகா ஷை தெலுங்கு ௵ சந்தா ... | 5 | 0 | 0 |
| 49. | ஸ்ரீ வைஷ்ணவ ஸுதா ஷை ஹிந்தி ௵ சந்தா ... | 4 | 0 | 0 |
| 50 | அத்புதசக்தி ... | 0 | 8 | 0 |

மற்றும் பல புத்தகங்களுக்குப் பெரிய கியாடலாக் தருவித்துப் பார்க்க.

மானேஜர், கிரந்தமாலா ஆபீஸ்.
சின்ன காஞ்சீபுரம்.

ஸ்ரீ:

ஸ்ரீவைஷ்ணவ வித்வான்களுக்கு அவசியமான மிகச்
சிறந்த சாஸ்த்ரார்த்தங்களடங்கிய
# புத்தகங்களின் விளம்பரம்.

# உத்யாந பத்ராதிப பாக்யமாலா.

उद्यानपत्राधिपभाग्यमाला
पुष्पैः शतेन क्रमशः प्रथेत ।
तत्राद्ययावत्प्रचुराणि पुष्पाणि
एतानि नित्यं विबुधावतंसाः ॥

இந்த மாலையில் இதுவரை வெளிவந்திருக்கிற
அருமையான மலர்கள்—

1. உத்யாந ஸம்வாதம்.

இது சென்னை வித்வான். அனந்தாசாரியர் ஸ்வாமியால் வெளியிடப்பட்டது. ஷை உத்யாந பத்ரிகாசிரியருடைய ஞானப் பெருமையையும் மஹா ப்ராமாணிகத்வத்தையும் ஸாரமாக விவரிப்பது. ஸம்ஸ்க்ருத காலெஜ் வித்வான்களால் மிகவும் மெச்சப்பட்டது. விலை 0–4–0.

## 2. உத்யாநசிக்ஷா—(முதல் பிரசுரம்.)

இது பண்டித. கோமடம் ஸம்பத்குமார ஸ்ரீநிவாஸா சாரியர் ஸ்வாமி பணித்தது. முன் க்ரந்தத்தைக் காட்டிலும் ரஸம்மிகுந்தது. அஸ்தமிதாந்ய பாவமாக வாசிக்கத் தக்கது. விலை 0—3—0.

## 3. உத்யாநசிக்ஷா—(இரண்டாவது பிரசுரம்.)

இதுவும் ஷை ஸ்வாமி அநுக்ரஹித்தது. ஆச்சரியமான 27-பாராக்கள் இருபத்தேழு நக்ஷத்ரங்கள் போன்றவை யென்று மஹான்கள் கொண்டாட நின்றது. விலை 0—8—0

## 4. ரஸிக ரஸாயநம்.

இது ஸ்ரீ காஞ்சீ அண்ணங்கராசாரியர் ஸ்வாமியருளியது. ஸம்ஸ்க்ருதபாஷை — தெலுங்குலிபி. விலை 0—10—0. இந்த க்ரந்தத்தின் பெருமையை அவரவர்கள் அநுபவித்தேயறிய வேண்டும். ஷை திருமலை தாதாசாரியர், முன்னோர்களுடைய திருவாக்குகளை விபரீதமாக்கியிருக்கும் வைபவம் இதில் விசதமாகக் காணத்தகும். ஸ்ரீகாஞ்சீ வித்வான் இளங்காடு ரங்காசாரியர் ஸ்வாமியின் ஸாக்ஷ்ய பத்ரிகையும் இதில் விளங்கும். கோதாவரி கனபாடி. சார்த்தூலம் வெங்கடஸுப்பாராய சாஸ்திரிகளின் பத்ரிகை வெகு ஆனந்தமானது இதில். இப்புத்தகத்தின் 46, 47, 48 பக்கங்களிலுள்ள அருமையான ச்லோகங்களை கீர்த்திமூர்த்தியான ஸ்ரீமத் ஆக்கூராண்டவன் பலகால் வாயாரச்சொல்லி யுகந்தாரென்பது ப்ரஸித்தம். அவற்றுள் *கீலோத்பாடந வாநரஸ்ய சரிதம்* என்பது முதலாக மூன்றுச்லோகங்களுக்கும் மூவுலகும் விலையாகுமோவென்று விசேஷித்து உகந்தபடி.

## 5. வித்வத் வைதிக பூஷணம்.

இதுவும் (ப்ர. அ.) ஸ்வாமி பணித்தது. ஷை திரு மலை தாதாசாரியர் உத்யாந பத்ரிகை (19—4ல்) வைதிகம் என மகுடமிட்டு இரண்டேவரி யெழுதி ஒரு வேண்டு கோள் வெளியிட்டிருந்தார். அதை நிறைவேற்றும் வியாஜ மாக, ஸ்வாமி மறைப்பாற்கடலைத் தமது திருநாவின் மந் தரத்தால் கடைந்து ஸகல வித்வத்வைதிக போக்யமான திவ்யாம்ருதத்தை யளித்ததாக மெச்சப்பட்டது. இது விலை 0—4—0

## 6. தத்வஹிதோபதேசம்.

இதுவும் (ப்ர. அ.) ஸ்வாமி பணித்தது. விலை 0—4—0. இதைப்போன்ற நூல் வேறில்லை யென்று நிஷ் பக்ஷபாதர்கள் கொண்டாட நின்றது. இதில் ஸாரமாகப் பத்து விஷயங்களை யெடுத்துக் காட்டி 'வைவஸ்வதமந்வந் தரே ஜம்பூத்வீபே பாரதவர்ஷே பரதகண்டே மேரோர் தக்ஷிணே பார்ச்வே இவர்களாலும் இவர்களது தந்தை தந்தை தந்தை தந்தை தம் மூத்தப்பர்களாலும் புத்ர பௌத்ர நப்த்ருப்ரப்ருதிகளாலும் இவற்றுக்கு விடை சொல்லித் தலையெடுக்க முடியாது' என்று சபதம் செய் திருக்கும் பெருமை பொலிந்துள்ளது. இதில் மன்னார் குடி, பண்டித. ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி வெளியிட்டிருக் கிற விஜ்ஞாபனம் விசேஷித்துப் போற்றத் தக்கது.

அதில் ஒரு பகுதி காண்மின்;—

"தேசிகப் பிரபந்தத்தின் பாடவிஷயத்திலும் உரை விஷயத்திலும் குற்றங்குறைகள் கூறப்பட்டால் பதிப்பாள ரான ஸ்ரீராமதேசிகாசார்யரன்றோ இதற்கு பதிலுரைக்க முன்வரவேண்டும். அவர் ஸ்ரீ அண்ணங்கராசாரியர் ஸ்வா

மிக்கு எழுதி யிருந்த கடிதங்களெல்லாம் அச்சாகி வெளி வந்திருக்கின்றன. "தேவரீர் கிருபையோடும் ஆராய்ச்சி யோடும் திருத்திக் கொடுக்கிற பாடமே தேசிகன் திருவாக்கில் திருவவதரித்ததென்று நான் திண்ணமாகக் கொள்வேன்" என்று அந்த ஸ்ரீராம தேசிகாசாரியர் ஸ்ரீஅண்ணங்கராசாரியர் ஸ்வாமிக்குப் பல கடிதங்களெழுதி யிருப்பதை யாரும் மறைக்க முடியாது. அவர் உண்மையில் ஸமர்த்தர்; ஆராய்ச்சியாளர். அவர் இப்படி ஹார்தமாக எழுதி யிருக்கும்போது அவரையுள்ளடக்கி மற்றையோர்கள் வம்பு தும்பாக எதையேனும் எழுதிப் போருவதில் என்ன பயன்? எழுதுகிற விஷயங்களும் ஒன்றுக்கொன்று ஸம்பந்த மில்லாமலிருக்கின்றனவே. பதில் சொல்ல முடியாத விஷயங்களுக்கு பதில் சொல்லப் புறப்படுவது தகுதியன்றே. D. T. தாதாசாரியர் 'கோதைபோலும்' என்கிற சிறு புத்தகத்தை வெளியிட்ட அடுத்தவாரத்திலேயே அதற்குப் பரிபூர்ண பதிலுரையான துவரைப்பிரான் திருவருளென்கிற அற்புதமான நூல் அவதரித்தது. சென்ற திருவாடிப்பூர மஹோத்ஸவ ஸமயத்தில் மன்னார்குடி அக்ரஹாரத்தில் 10 நாள் நடைபெற்ற வித்வத் ஸதஸ்ஸில் அந்த நூல் த்ரி மதஸ்த வித்வான்களாலும் வெகு ஊக்கத்துடன் பரிசீலனை செய்யப்பட்டு மிகவும் கொண்டாடப் பெற்றது. அந்த ஸதஸ்ஸுக்காக இந்த D. T. தாதாசாரியரும் வந்திருந்து திருமேனி பாங்கில்லாமையை அபிநயித்துப் பெரும்பாலும் விலகியே யிருந்து சென்றார். 'இப்புத்தகத்திற்கு விடைவருமோ?' என்று கேட்டவர்களுக்கு வெகு சாதுர்யமாக பதில் சொன்னார்;—" அண்ணங்கராசாரியருக்கு எல்லாவித ஸௌகரியங்களுமுண்டு; எனக்கு ஏதுவுமில்லை; ஆனாலும் பார்க்கிறேன்" என்றார். எங்களுக்கு திருப்திகாமாக இரண்டொரு விஷயங்களுக்

காவது பதில் சொல்லுமே' என்று கேட்டதற்கு 'எல்லாம் க்ரமேண தெரியவரும்' என்றகன்ருர். இவர் விஷயங்களை உள்ளபடி க்ரஹிப்பவரேயல்லர்; ஸ்வயமபிலிகிதம் ஸ்வயம் நஜாநாதி என்கிற முறையிலே ஏதோ எழுதிப்போருகிறவர் என்றே அவ்விடத்திலுள்ள ஸகல வித்வான்களும் ஏக கண்டமாகக் கூறினர். ஸஹ்ருதயஹ்ருதயங்கமமாக எழுதுவதற்கு விஷயம் சிறிதுமில்லாவிடினும் எதையாவது எழுதிக்கொண்டேயிருக்க வேண்டியதென்கிற வொரு ஸங்கல்பம் கொண்டிருப்பதாகவும் கூறிஞரிவர். அப்படியே யெழுதுக. அவ்வளவும் உலகுக்கு மஹோபகாரமாகவே முடிந்து வருகின்றதென்பதைக்கூடவா இந்த ஸ்வாமி தெரிந்துகொள்ளமாட்டாதவர்? நன்கு தெரிந்துகொள்வர். இப்போது தத்வஹிதோபதேசமென்கிற இந்நூலை ஸேவிக்கும் ஒவ்வொருவரும் இந்த D. T. ஸ்வாமியிடத்திலேயே மஹத்தான க்ருதஜ்ஞதையைச் செலுத்துவர்களென்பது திண்ணம்." என்பதாகவுள்ளது.

---

## 7. துவரைப்பிரான் திருவருள்.

இதுவும் ப்ர. அ. ஸ்வாமி பணித்தது. விலை. 0—10—0 இப்புத்தகம் "எப்பொழுதும் நாள் திங்களாண்டூழி யூழி தொறும் அப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுதமே" என்றீடுபடத்தகுந்த புத்தகமிதுவேயென்று வித்வான்கள் மகிழ நின்றது. (கோதை போலும் ஆராய்ச்சி.) வைதிக வித்வதாபரணம் என்கிற அநுபந்தத்துடன் கூடியதிது. திருவையாறு மஹாராஜா ஸம்ஸ்க்ருத காலெஜ் ப்ரொபஸர் S. T. ஸ்ரீநிவாஸாசாரியர்

M. A. L. T., அவர்கள் இப்புத்தகத்தை வாசித்துப் பரவசராகி உருகியெழுதின பத்ரிகையும் (3—8—1946) வெளிவந்துள்ளது ; அதாவது—

கோதாவிலாஸம்—கல்யாணபுரம். திருவையாறு
மஹாராஜா ஸம்ஸ்க்ருத காலெஜ் ப்ரொபஸர்

S. T. ஸ்ரீநிவாஸாசாரியர் M. A., L. T.,

எழுதுகிறார் :—

ஸ்ரீமத் P. B. A. ஸ்வாமி ஸன்னிதிக்கு ஸஹஸ்ராவ்ருத்திப்ரணாமபூர்வக விஞ்ஞாபனம். துவரைப்பிரான் திருவருளைப்பெற்று வாசித்து மகிழ்ந்தனன். இவ்வாராய்ச்சி எழக் காரணமாகிய நூலும் பார்க்கப் பெற்றிருந்தால் இன்னும் சுவையாயிருந்திருக்கும். தேவரீர் அப்படியே அநுவதித்திருப்பதால் குறையொன்றுமில்லை. தேவரீரது நயத்தையும் நகைச்சுவையையும் இடைவிடாது மிளிர்ந்து நிற்கும் செங்கண்மாலன்னையும் சிற்றறிவுடைய அடியேனோ சொல்லுந்திறமுடையேன்.

தாஸன், S.T.S. 3–8–46.

## 8. வாத்ஸல்யார்த்த ப்ரகாசிகை.

இதுவும் ஸ்வாமி பணித்தது. இன்சுவையே வடிவெடுத்த 220 சுலோகங்களால் பகவானுடைய வாத்ஸல்ய குணத்தின் தத்துவம் பரக்க நிரூபிக்கப்பட்டுள்ளது இதனில். இது தேவநாகரி லிபியில் தமிழில் பொழிப்புரையோடும் வெளிவந்துள்ளது. விலை 0—12—0 இதுவே தெலுங்கு லிபியிலும் தெலுங்கு பாஷை வியாக்கியானத்தோடும் வெளிவந்துளது. அதன் விலை 0—8—0.

## 9. ஸஹ்ருதய ஸௌபாக்யம்.

இதுவும் ஸ்ரீஸ்வாமி பணித்தது. ஸம்ஸ்க்ருத பாஷை யில் தெலுங்கு லிபியிலுள்ளது. இதில் உத்யாந பத்ரிகா சிரியருடைய மயக்குகள் யாவும் கண்ணாடிபோல் எடுத் துக் காட்டப்பட்டுள்ளன. சுருக்கமான தமிழ்முகவுரை யோடுங் கூடியது. இதன் விலை 0—8—0.

## 10. ப்ரணதி விமுகார்த்த பரிசீலனம்.

இதுவும் ஸ்ரீ ஸ்வாமி பணித்தது. "பணியவிசைவில் திசைமுகன்தன்" என்ற தேசிகப் பிரபந்தப் பாசுரத்திற் குச் சிலர் எழுதிய அவப்பொருளை ஸமர்த்திக்கவந்த உத்யாந பத்ரிகாசிரியருடைய வாதங்களைச் சரமாரியாகக் கண்டித்தது. தெலுங்கு லிபியில் ஸம்ஸ்க்ருதபாஷையிலுள் ளது. நெ. 9, ஸஹ்ருதய ஸௌபாக்கியத்தோடு சேர்ந் துளது. இது தேவநாகரி லிபியிலுமுண்டு. தமிழ் வசன மாகவுமுண்டு. விலை 0—6—0.

## 11. ஸபாபுஜங்கீ ஸர்வஸ்வம்.

இதுவும் ஸ்ரீஸ்வாமி பணித்தது. 115—ச்லோகங்கள் கொண்டதாய் இரண்டு ஸர்க்கங்களுடையதான காவியம். இது தெலுங்கு லிபியில் தெலுங்கு டீகையுடன் கூடியது. விலை 0—8—0. தேவநாகரி லிபியில் மூலமும் தமிழ்ப் பொழிப்புரையுமுள்ளது. விலை 0—8—0. தேசிகனுடைய திரசர்யையில் "ஸபா புஜங்கீ குணபம் தருண்ய:" என் றுள்ள ச்லோகத்தில் ஸ்வாமி ஸபையைக் கண்டால் விலகி நிற்பர் என்று தெரிவிக்கப்பட்டதின் தத்துவத்தை மிக விரிவாக வுணர்த்துமிந்நூல். (இதில் உத்யாந பத்ரிகாசிரி யர்க்கு ஸாக்ஷாத்தான பங்கமில்லை யென்று சொல்லலாம்.)

## 12. ந்ருஸிம்ஹாவதார ஹேதுநிரூபணம்.
## 13. விபவாவதார சோகதத்வம்

இவையும் ஸ்ரீஸ்வாமி பணித்தவை. ஸம்ஸ்க்ருத பாஷையிலும் தமிழ்ப்பாஷையிலு முள்ளன. உத்யாந பத்ரிகாசிரியருடைய விபரீதவாதங்களை வேரறுப்பன இவ்விரண்டும். ஸகல பண்டிதர்களும் விரும்பி வாசிக்கத் தக்கவை இவ்விரண்டு க்ரந்தங்களையும் ந்ருஸிம்ஹப்ரியா பத்திராதிபரான ஸ்ரீ. உ. வே. S. வாஸுதேவாசார்ய ஸ்வாமிகள் வரப்பெற்று ஆனந்தம்பொங்கி ஸ்ரீஸ்வாமி ஸன்னிதிக்கு விடுத்த திருமுகம் வருமாறு:—

“ குசலம். ஸ்ரீ. ஸைதாப்பேட்டை. ஆழிமழைக்கண்ணா.

ச்ரியைநம:. ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

சரமாவதிதாஸனுகிற வாஸுதேவதாஸன் அனந்தஸுக்ருதப்ரணாம பூர்வகமாகச் செய்யும்விண்ணப்பம்......... அடியேனுக்கு ஒருமாஸமாக உடம்பு அஸ்வஸ்தமாக இருந்து நாலுதினங்களாகக் கொஞ்சம் குணமாகிவருகிறது. ஒரு கருமத்தின் அநுபவம் ஏதாத்ருச துக்கத்தை விளைவித்த போதிலும் ஏதோ விசேஷித்ததொரு அஜ்ஞாதஸுக்ருதம் ஒரு பாக்யவிசேஷத்தைக் கொடுத்து வியாதியினுல் உண்டான சிரமத்தை மறக்கும்படி செய்தது. அந்த பாக்யமென்ன வென்றால் தேவரீர் திருவாய் மலர்ந்தருளிய ஸ்ரீகோசங்களின் ஸேவாலாபமே. பகவச் சாஸ்த்ரதத்வம், ந்ருஸிம்ஹாவதார ஹேது நிர்ணயம், விபவாவதார சோகதத்வம் என்னும் ஸ்ரீகோசங்களைத் தேவரீர்கள் மஹத்தான க்ருபையுடன் அனுப்பியிருந்தது. அவைகளை ஸேவித்துக்கொண்டே ச்ரமத்தையறியாமல் பொழுது போக்கினேன். அவைகளின் ஸ்வாதுத்வத்தை என் சொல்வேன்!......ஸம்ஸாரமே அபவர்க்கமாக நினைக்கப்

படுகிறது...இப்படிப்பட்ட ஸ்ரீகோசங்களை அநுக்ரஹிப் பதற்கான ப்ரீதி விசேஷம் மேன்மேலும் அபிவ்ருத்தமாகும்படி ஸ்ரீசரண்யன் அநுக்ரஹிக்க வேணுமென்பதே அடியேனுடைய ப்ரார்த்தனை....

வாஸுதேவதாஸன். 19—12—47

## 14. அபிநவதயா சதகம்.

இதுவும் ஸ்வாமி பணித்தது. ஸம்ஸ்க்ருத பாஷையிலமைந்த 250 ச்லோகங் கொண்டது. ஸம்ஸ்க்ருத கத்ய ரூபமான தாத்பர்ய ஸாரத்துடன் கூடியது. தெலுங்கு லிபியில் அச்சிடப் பெற்றது. ஸஹஸ்ரநாமத்தில் **விகர்த்தா** என்கிற திருநாமத்தின் பட்டர்பாஷ்யத்திலுள்ள பொருளை ரஸாபாஸப் படுத்தி யெழுதியிருந்த உத்யாநபத்ரிகையைப் பாறுபாறுக்கின நூலிது. விலை. 0—12—0 இதனுடைய தாத்பர்யஸாரமே (கெ. 13) விபவாவதார சோகதத்வமென்கிற தமிழ் நூல்.

## 15. அம்ருதலஹரீஸஞ்சிகைகள்.

உத்யாந பத்ரிகையில் வெளிவந்த அஸம்பத்தப் பொருள்கள் பலவும் அப்போதைக்கப்போது அம்ருதலஹரி யென்னும் மாதப் பத்திரிகையிலும் ஸ்ரீஸ்வாமியால் நிரஸிக்கப்பட்டிருக்கின்றன வென்பது உலகப் பிரசித்தமே. அப்படிப்பட்ட விஷயங்கள் கொண்ட லஹரி ஸஞ்சிகைகளின் விலை. 2—14—0-

## 16. வைதிக மநோஹரா ஸஞ்சிகைகள்.

தேவநாகரலிபியில் ஸம்ஸ்க்ருத பாஷையில் ஸ்ரீஸ்வாமியால் நடத்தப்பட்டுவருமிந்த மாதப் பத்திரிகையிலும் பெரும்பாலும் பத்ரிகைதோறும் உத்யாந பத்ரிகா

விதண்டா நிராஸங்கள் நிரம்பியிருக்குமென்பதும் ஜகத்ப்ரஸித்தம். இதில் ஸ்ரீஸ்வாமி எழுதிவருமவை தவிர, இதர பண்டிதர்களும் உத்யாந பத்ரிகையைக் கண்டித்து எழுதிவரும் வியாஸங்களும் விசேஷித்து வாசிக்கத் தகுந்தவை. இப்படிப்பட்ட விஷயங்கள் கொண்ட ஸஞ்சிகைகளுக்கு மாத்திரம் விலை 4—11—0.

## 17. வைதிக ஸௌபாக்யம்.

உத்யாந பத்ரிகையில் விரலுக்குத்தகாத வீக்கமென்று வைதிகர்கள் பலரும் விளம்பும்படி வெளிவந்த வேதஸம்பந்திகளான விஷயங்களை விரிவாகச் சிதைத்து வைதிகர்களுள்ளம் குளிர ஸ்ரீஸ்வாமியால் ஸம்ஸ்க்ருத பாஷையில் இயற்றப்பட்ட நூல் இது. ஷை வைதிக மனோஹரா பத்ரிகையில் பகுதியாக வெளிவந்துகொண்டிருப்பது இது. அப்பத்திரிகைக்கு வருஷச் சந்தா (3 ரூ.) செலுத்துபவர்களுக்கு இந்நூல் எளிது. பிறகு தனியாகவும் வெளிவரும்.

## 18. ப்ரஹ்மவ்யாப்தி பரிஷ்க்ரியா.

இதுவும் ஸ்ரீஸ்வாமியால் ச்லோகங்களாக இயற்றப்பட்டு கத்யரூபமான தாத்பர்யஸாரத்தோடுங் கூட தேவநாகரியில் அச்சிடப் பெற்றது. கீர்த்திமூர்த்தியான ஸ்ரீமத் பரமஹம்ஸ- இளங்காடு ஸ்வாமியினால் ' அபிநவ தத்வமுக்தாகலாபமோ !, அபிநவ அதிகரண ஸாராவளியோ !' என்று தெருட்டாடிக் கொண்டாடப்பட்ட திவ்யக்ரந்தமிது. எம்பெருமானுடைய வ்யாப்தியின் தத்துவத்தை விரிவாக விளக்குமிது. விலை 0—8—0.

## 19. பரமார்த்த ரக்ஷா.

இதுவும் ஸ்ரீஸ்வாமி இயற்றிய விரிவான தமிழ்நூல். உத்யாநபத்திராதிபரும் இவரைப் போன்ற மற்றுஞ் சில

பெரும் எழுதியுள்ள விஷயங்களை விரிவாக விமர்சித்து அபார்த்தங்களை யெல்லாம் அறவேயகற்றி வித்வான்களை மிகமிகவுகப்பித்த நூலிது. அபூர்வமான பலவிஷயங்களை யநுபவித்து அகமகிழ நினைக்குமவர்களுக்கு நவநிதியானது இது. விலை 1—8—0.

## 20. விமர்சமும் பராமர்சமும்.

கோயமுத்தூர் பட்டர் திருமாளிகைத் தலைவர். ஸ்ரீ. உ. வே. திருமலை வேத வ்யாஸபட்டர் ஸ்வாமி ஸம்ஸ்க்ருத பாஷையில் பணித்தது. தேவநாகரியில் அச்சிடப்பெற்றது. மதிரேக்ஷணார்த்தப் போராட்டம் முதலிய பல விஷயங்களில் தத்துவ முணர்த்துவது. விலை 0—8—0.

## 21. பலநூல் தொகுதி.

ஸத்ஸம்ப்ரதாய பரித்ராணம், ஐகமத்யரஸம், ஆராய்ச்சி, மதிரேக்ஷணார்த்த ஸர்வஸ்வம், சிரோமணி சிரோபூஷா, சிரோமணி சேகரம், பரிஷ்காரம், தௌர்ப்பாக்ய த்ருடீகரணம், ப்ராமாணிகமதிரேக்ஷண, விவாத சாந்தி, வைதிக ஹ்ருதயா பரணம் முதலிய 16 நூல்கள் ஒரு தொகுதியாக வுள்ளது. விலை 3—9—0.

## 22. அத்புத சக்தி.

ஸமீப காலத்தில் உத்யாந பத்திராதிபரால் வெளியிடப்பட்ட ஸர்வசக்தி யென்னும் சிறு சுவடியிலுள்ள விஷயங்களெல்லாம் விபரீதங்களென்று ஸ்ரீஸ்வாமி விரிவாக விளக்கியது. எம்பெருமானிடத்தில் பரமபக்தியை வளர்க்குமிந்த திவ்யக்ரந்தம் ஒவ்வொரு வித்வான்களுக்கும் பக்தர்களுக்கும் அநவரதம் கையிலேயே விளங்கவுரியது. விலை 0—8—0.

# அறிவிப்பு.

இப்புத்தகங்களெல்லாம் பலஇடங்களில் கிடைக்கும்;

(1) 31. A. நாட்டுப்பிள்ளையார் கோவில் தெரு, ஜி. டி. மதராஸ்.

(2) 29. இருளப்பன் தெரு, ஜி. டி. மதராஸ்.

(3) க்ரந்தமாலா ஆபிஸ், காஞ்சீபுரம்.

(4) 92. கோவிந்த ராஜன்ஸன்னிதிவீதி, திருப்பதி.

(5) ஸ்ரீவிலாஸம் பிரெஸ், கீழச்சித்திரவீதி, ஸ்ரீரங்கம்.

(6) 72. ஸம்பிவன்வீதி பட்டர்திருமாளிகை, கோயமுத்தூர்.

விசேஷ அறிவிப்பு:— மேல்குறித்த புத்தகங்கள் யாவும் விலை கொடுத்து வாங்க சக்திபற்றவர்கள் வித்வான்களாகவோ வித்யார்த்திகளாகவோ இருந்தால் அப்படிப்பட்டவர்களுக்கு மாத்திரம் இவை இனாமாக வழங்கப்படும். அப்படி இனாமாகப் பெறவிரும்புமவர்கள் "ஜி. வி. பார்த்தஸாரதி அண்டு கோ. 13. சின்னதம்பி முதலிவீதி. ஜி. டி. மதராஸ்" என்கிற விலாஸத்திற்கு இரண்டு வித்வான்களுடைய ஸெர்ட்டிபிகேட்டுடன் விண்ணப்ப மெழுதிக்கொள்ள வேண்டும். ஸைபாக்ய மாலையில் மேன்மேலும் வெளிவரும் மலர்களும் அவர்களுக்கு அனுப்பப்பட்டுவரும்.

26—1—48
சென்னை

M. பார்த்தஸாரதி.
31, A. நாட்டுப் பிள்ளையார் கோயில் தெரு, ஜி. டி. மதராஸ்.

குறிப்பு:—மேல்கண்ட விலாஸத்தில் ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்திற்கு நிதியாகவுள்ள பலவகைப் புத்தகங்களும் கிடைக்கும். கியாடலாக் தருவித்துப்பார்க்க.

Printed at the Rathnam Press Madras. C. 500. 27-1-48